மலைக்கும் பிறவிப் பிணிமருந்தே
வாழ்த்து வார்சிந் தாமணியே
வயங்குஞ் சைவப் பெருவாழ்வே
மாறாக் கருணை மாக்கடலே
சிலைக்குந் தமிழ்த்தண் டகநாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றையருட்
செல்வா சிற்றில் சிதையேலே (௮)



# சிறுபறைப்பருவம்

ஆயபர சமயக் கருங்கடா யானைக்
கரிக்குருளை வாய்முழக்கு
மரும்புகழ்ச் சைவப் பசும்பயிர்க் குலகுசூ
மாழியுண் புயன்முழக்கும்
பாயமிடி யாளருக் களவில்பொன் சொரிசெய்த
பண்டார வாய்திறந்து
பலவுங் கவர்ந்திடும் வினைநெறித் திடுகொடைப்
பயன்முரசி னைமுழக்கு
நேயமிகு வளவர்பெரு மாற்காக வப்பரி
னோர்ந்ததன் படையெழுப்பு
நிலாம்பணை முழக்குமா கக்குணின் மலர்க்கைகொடு
நிகழ்பாலி வளனுணர்ந்து
தேயமுழு தும்பரவு தொண்டைவள நாட
சிறுபறை முழக்கியருளே
தென்றலங் கன்றலவு மன்றவொண் குன்றைமுனி
சிறுபறை முழக்கியருளே. (க)

ஓங்குமுனி வரரிருவர் கைகுவித் தரமுழக்
குறவெழுப் பிக்களிக்க
உலகமுழு தீன்றசிவ காமவல் லித்தா
யுமேலாசனம் விடுத்துநிற்கப்
பாங்குபுனை செம்பொனம் பலநடன நவிலும்
பரஞ்சோதி மதுவொழுக்கும்

பச்சைத் துழாயண்ணன் மத்தள முழக்கினும்
பரவுபே ருவகைபூப்ப
வாங்குதிரை யாற்பாலி வீசுசெம் மணியும்வெள்
வயிரமுங் கரைவிராவ
வண்படிகர் மேயும்வளை கோட்டெருமை யதுகண்டு
வாய்வெரீஇ யோட்டெடுக்குந்
தேங்குதிரு வம்பரவு தொண்டைவள நாட
சிறுபறை முழக்கியருளே
தென்றலங் கன்றுலவு மன்றவொண் குன்றைமுனி
சிறுபறை முழக்கி யருளே. (௨)

புகழ்சரியை கிரியையை யனுட்டித்து வருகின்ற
புண்ணியப் பேற்றினார்க்குப்
புலரியிற் சிவபிரான் றளியெழுஞ் சங்கமுற்
போதரு முழக்காகவு
மிகழ்வில்சிவ யோகசா தனமரீஇ யப்முறை
யியங்குதிற லாளருக்காங்
கெழுகின்ற சங்கபட கம்பேரி யாதியி
னிசைப்பெரு முழக்காகவு
மகழ்கின்ற பாலியாற் றலையெழீஇக் கற்பக
மலைத்தோட வதனடிக்க
ணவாய்நின்ற காமதே னுவைநோக்கி நின்று
லமைந்ததிப் படரெனநனி
திகழ்கின்ற செல்வமுயர் தொண்டைவள நாட
சிறுபறை முழக்கியருளே
தென்றலங் கன்றுலவு மன்றவொண் குன்றைமுனி
சிறுபறை முழக்கியருளே. (௩)

ஆன்றசிவ புண்ணிய முழக்கமும் பற்பலவ
ராயவடி யவர்தம்வரலா
றாகிய சரித்திர முழக்கமுந் தெய்வமண
மகலாத தமிழ்முழக்கு
மேன்றபல வறமுழக் கமுமிணை யிலாதாய
வினியதிரு வருண்முழக்கு
மெய்துதற் கரிதாஞ் சிவானு போகப்பே
ரிரும்பெரு முழக்குமான
மான்றபைங் கமுகம் பொழிற்றலைத் தவிர்செய்ய
மதுவநிறை தேத்தடைக்கண்
வான்பிறைக் கோடுதற் கவரின னெனக்கீள
வாவிகுள மோடையெங்குந்
தேன்றவழ வதுவிழுந் துண்டீர வளநாட
சிறுபறை முழக்கியருளே
தென்றலங் கன்றுலவு மன்றவொண் குன்றைமுனி
சிறுபறை முழக்கியருளே. (௪)

வில்லூரு மணிமோலி வளவர்பெரு மான்பொனடி
வீழாத மருவலர்க்கும்
வெண்ணீறு கண்மணி புனைந்தைந் தெழுத்தெணு
வீணராஞ் சமயருக்கு
மெல்லூரு மொண்சிவ மணங்கமழ்த லில்லா
தியைந்தசிந் தாமணிமுத
லெந்நூற்கு நெய்தலம் பறைமுழக் கேடாக
வெல்லொளி மழுக்குமேனிச்
சொல்லூரு மெம்பிரான் பெருமதம் பொழிமண்
டுழாங்கைமா வியானைதந்த

தோற்போர்வை போர்த்தெனத் தென்றல்வந் துலவவழ
றேற்றுதே மாஞ்சோலைமேற்
செல்லூரு மேன்மையமை துண்டீர வளநாட
சிறுபறை முழக்கியருளே
தென்றலங் கன்றுலவு மன்றலொண் குன்றைமுனி
சிறுபறை முழக்கியருளே. (௫)

வேறு

பதிருந் தரமற வின்பா லளவிப்
பிழிசுவை மதுவிரவிப்
பிறங்கிய புல்ல கண்ட நிறீஇச்சுவை
பெருங்கண் டுங்கூட்டி
யெதிரும் பொருளில் பலாக்கனி மாங்கனி
யிவைவா ழைக்கனிமு
னியையு முழுக்கனி முந்திரி கைக்கனி
யிவ்விர தமுநாட்டி
யதிருங் கடலமிர் தமுமு ளுறுத்தி
யவாங்குழல் வீணையிசை
யத்தனை யும்புக வைத்துச் சிவமணா
மகலா தேகமழ
முதிரு மருட்கவி பாடிய புலவன்
முழக்குக சிறுபறையே
முழுமணி மாடக் குன்றத் தூரன்
முழக்குக சிறுபறையே. (௬)

அத்தி தருங்கவி யென்மரு நன்று
வரைந்துதி ரம்மட்டோ
வவாவிய புத்தி தருங்கவி யென்மரு
மதுமட் டோவின் னுஞ்
சித்தி தருங்கவி யென்மரு மெல்லாத்
தீர்த்தங் களு முமா
செய்யாச் சுத்தி தருங்கவி யென்மருஞ்
செப்பிய வம்மட்டோ
பத்தி தருங்கவி யென்மரு மாகிப்
பாரிற் புலவரெலாம்
பல்லா றேதுப பாராட் டக்கதி
பற்றிய பல்லோர்க்கு
முத்தி தருங்கவி பாடிய புலவன்
முழக்குக சிறுபறையே
முழுமணி மாடக் குன்றத் தூரன்
முழக்குக சிறுபறையே. (எ)

கனிவி லெமைப்பொரு வார்களு நெஞ்சு
கரைந்து கரைந்துருகக்
காமரு பத்தியும் வயிராக் கியமுங்
கவினக் குதிகொள்ளத்
தனிவில்பொன் மேருவெ னக்கொடு திரிபுர
தகனம் புரிபெருமான்
றயங்குபொ னம்பல நின்றுபல் லோரனு
சவிசெய நடநவில
நனிவி ளிடும்புகழ் மிகுசம் பந்தரு
நாவுக் கிறையவரு

நாவலர் கோவுஞ் சிரகர கம்பித
நன்கு புரிந்தருள
முனிவி றமிழ்க்கவி பாடிய புலவன்
முழக்குக சிறுபறையே
முழுமணி மாடக் குன்றத் தூரன்
முழக்குக சிறுபறையே. (அ)

நந்து புராணமெவ் வளவா யிற்றென
நாடிறு பயபாய
னகைமகிழ் பூப்ப மணிக்கா லாயிர
நண்ணிய மண்டபவாய்
வந்து விராயு மிடத்தி னமர்ந்து
வயங்குறு கையேட்டின்
மாண்பார் கண்டங் கொண்டங் கெழுதுநர்
மாறு தேயெழுதப்
பிந்து வரைந்த வெழுத்தினு மொன்றும்
பெயரா தக்கரமாம்
பெயர்ப்பொரு டேற்றுபு நிலைபெற யார்க்கும்
பெட்கும் விருப்பமெழ
முந்து தமிழ்க்கவி பாடிய புலவன்
முழக்குக சிறுபறையே
முழுமணி மாடக் குன்றத் தூரன்
முழக்குக சிறுபறையே. (கூ)

தங்கு தமக்கெதிர் நின்றுள முருகத்
தரிசித் திடுவளவன்
றன்செவி பரிசன ரஞ்செவி மறையவர்
தஞ்செவி யுங்கேட்க

வெங்கு மளாம்புக ழிச்சே வையர்கோன்
யாமே முதனல்க
வெம்மடி யார்வர லாறு முழுக்க
வினிக்கப் பாடினனாற்
பொங்கு விருப்பிற் கேட்குக வென்னாப்
பொன்னம் பலவாணர்
பொலிதிரு வாக்கடி ஞெகிழியி னொலியொடு
பொற்ப வெழுப்பவருண்
மூங்கு தமிழ்க்கவி பாடிய புலவன்
முழக்குக சிறுபறையே
முழுமணி மாடக் குனறத் தூரன்
முழக்குக சிறுபறையே (௭)



## சிறுதேர்ப்பருவம்

---

மருவாய் நறுந்தா தகிக்கொடிங்கல் வளவர்கோ
மகனுட னிவர்ந்திரு கையு
மணிக்கவரி வாங்கிவீ சக்கற்ப கப்பூ
மகிழ்ந்துவா னுடர் தூற்றப்
பெருவாய் திறந்துபட கம்பேரி முதலாம்
பெரும்பணை யெலா முழங்கப்
பிறங்குமூ வாயிரவர் முதலியோர் மறையொலி
பிறங்கத் தொடர்ந்து போதக்
கருவா யுறுமற்றை யாருந் தலைக்குமேற்
கைகுவித் தேத்தி மேவக்
கருதும் புராணமுடி விற்குஞ் சரத்தில
கடத்திவர்ந் தோங்கு தில்லைத்
தெருவா யுலாப்போது சேவையர் குலாதிபன்
சிறுதே ருருட்டி யருளே
சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்தினோன்
சிறுதே ருருட்டி யருளே. (க)

முறியுமல ரும்பொருவு திருமேனி யுமையம்மை
மூவுல குயத் தழுவுபு
மூரிப் புனற்கம்பை யெம்பிரான் றிருமேனி
முற்றுங் குழைத்த ஞான்றி
லறியும்வகை யறமெலாம் பொலியவிரு நாழிநெல்
லளந்தப் பிரான் கொடுக்க

வனையமா தேவியேற் றேற்றகை யுயிர்த்தமக
ளா லுயிர்த் தோர்க ளோநன்
னெறியுநல னும்பெருக வுளரெனல் குறித்தவர்கை
நீட்டப் பணிந்து வாங்கி
நீடுங் கொழுக்கொடுதம் மனையுதவி யானனி
நிரம்பப் பெருக்கு குடியுட்
செறியுமொரு குடியாய சேவையர் குலாதிபன்
சிறுதே ருருட்டி யருளே
சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்தினோன்
சிறுதே ருருட்டி யருளே.

வெருவப் பகைக்கடல் சுவற்றழ லரும்புகண்
விரைத்தாத கித்தொ டையலான்
வீசவீ சப்பெற்று வாம்பரி யுகைத்துமிளிர்
வெங்கடாக் களிறு கைத்து
முருவக் கதிர்த்தரள மாலைகால் யாத்திட்ட
வொள்ளொளிய யான மூர்ந்து
மொருநம்பி யாரூர னைப்புகலி யாண்டகையை
யொப்பாயி னைய தான்று
மருவப் பொலிந்தமட் டேரூரின் முதலடி
மரீஇய விருவரு ளொருவரு
மானுவாய் வையக மெடுத்தேத்த நிறைபுனல்
வயங்குமூ ருணிநி கர்த்த
திருவப் பெருக்கினமை சேவையர் குலாதிபன்
சிறுதே ருருட்டி யருளே
சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்தினோன்
சிறுதே ருருட்டி யருளே.

வசைதவிர் வினைத்திட்பம் வாய்ந்தாக வப்பாரின்
மாற்றல ரெதிர்ந்த காலை
மழைமதக் களியானை வாம்பரி சயந்தனமுன்
மற்றுள வரூதி னியெலா
மசைவில்பல் படைக்கலங் கொடுநூழி லாட்டுபுப
லர்று வெழுந்த நெய்த்தோ
ரவ்வனிக வழனிழூத் தோடியுவ ராழிபுக்
களவிறிடர் செய்ய நோக்கி
யிசைமல ரலங்கலொடு வாகையுஞ் சூடியா
ரெய்தப் புனைந்த பெருமா
னிரும்புலியை மேருமுடி யேற்றிப் பெருந்தே
ரிணங்குற வுருட்டி நேமி
திசைதிசை யுருட்டிடச் சேவையர் குலாதிபன்
சிறுதே ருருட்டி யருளே
சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்திடுவோன்
சிறுதே ருருட்டி யருளே. (௪)

சாதகப் பறவைக் கிரும்புயற் றுளியுஞ்
சகோரத்தி னுக்கு நிக்குஞ்
சந்திரன் விடுங்கரமு மம்புயத் திற்கேழு
தாம்பரித் தேரி ரவியு
மேதக வுறுந்தவத் திற்கருளு மவ்வருள்
விளக்கத் தினுக்கு ழுவனு
மேவருங் கல்விக்கு நுண்ணறிவு நுண்ணறிவு
விக்கத்தி னுக்கொ ழுக்கு
மோதக விலாதமைந் தாங்கருள் வழிச்செலீஇ
நோய்ப்பிறவி போக்கு வார்க்கு

நோற்றவர் புராணமில் லாதமை கராதா
னவன்றெம்மை யாண்ட பெம்மான்
றீதக மதித்திடாச் சேவையர் குலாதிபன்
சிறுதே ருருட்டி யருளே
சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்தினோன்
சிறுதே ருருட்டி யருளே. (ரு)

எய்குன்ற வார்சிலைப் பெருமா னுளத்துவகை
யெய்த மறையோர்கள் சூழும்
மியையவுப கரணமெல் லாந்தகச் சேர்த்தினிய
தென்னுமொரு தேத்த மர்ந்து
பொய்குன்ற யாககுண் டத்தழ லெழுப்பமேற்
போயபூம் புகைவா னொடு
பொலியுமுச் சைச்சிரவ மீயிராவ தந்தான்
பொறுத்த நிறமே வச்செயா
மெய்குன்ற வந்தவா றென்னெனக் கற்பகம்
வெதும்பப் புரிந்து பின்னும்
விண்ணு டடங்கவு நண்ணு வரம்பையர்
விழித்துணை யொருங்கி மைப்பச்
செய்குன்றை யம்பதிச் சேவையர் குலாதிபன்
சிறுதே ருருட்டி யருளே
சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்தினோன்
சிறுதே ருருட்டி யருளே. (சா)

புழுங்குங் கதிர்ப்பரிதி யெழுமுறுக் குடைமுகப்
புண்டரீகத்த டத்துப்
பொலிதரச் சூழ்ந்துநிற் கின்றதரு விடபமலர்
பொழிமது முழுக்க வீழ்ந்தே

யெழுங்குங் குமத்தோ ளிணைந்தமுலை யார்கள்கன
விரதமன் றென்று நீங்க
வெறிதிரை கொளுங்காலை யளவிலோ திமமாங்க
ணெய்திப் படிந்து துளையா
வழுங்குந் தரத்தவாய் மேலெழுமுன் னீங்கியோ
ராகமுழு வதுந னைந்தே
யருமைவெண் முகில்செய்ய தேன்பொழித லென்வியந்
தாகாய நோக்கி நிற்குஞ்
செழுங்குன்றை யம்பதிச் சேவையர் குலாதிபன்
சிறுதே ருருட்டி யருளே
சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்தினோன்
சிறுதே ருருட்டி யருளே. (எ)

வெங்கடிய வாணவ மலக்குருட் டிருளுளம்
வெரீஇப் பதறியோட் டெடுக்கும்
வெண்ணீறு சாதனம் விழைந்தவர்த முககமல
மேவுற் றொருங்கு மலரும்
பந்தமுற மேவுபர சமயர்வா யாம்பல்பல
வுந்துயர மைந்து குவியும்
பரவுவே தாகம புராணமெனு மங்கலப்
பணைமிக் கெழுந்தொ லிக்கு
மங்கலுழ மாதரா ருடலி னெறிந்தகுழை
யன்றித் தடப்பா ரில
ரவைகளையு மகலுற வகற்றினே மண்ணகத்
தமைய வெழுகின்ற தாய

செங்கதி ரெனச்சோலச் சேவையர் குலாதிபன்
சிறுதே ருருட்டி யருளே
சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்திடுனோன்
சிறுதே ருருட்டி யருளே. (அ)

சுவையமையு மோதகங் கனிபலவு மற்றவுந்
தும்பிமுக வற்கு நல்கித்
தொழவமுது செய்தலா லூறென்ப திந்நகர்
சூழ்நக ரினும்பு காது
நவையதடை யாதென்னி னச்சுமுதல் வலியவே
நவில்வேண் டுவதி னியெவ
னன்னுதற் றிருநீறு நிலவெறிக் கக்குழை
நலங்கொண்மணி வெயிலெ றிக்க
வவையகம் வியக்குமுப் புலவரருண் முக்கனி
யருந்தமிழ்ச் சுவைய னைத்து
மாராய்ந் தெடுத்துப்பல் செய்யுண்முக மாவறிய
வறிவித்த பெருநா வலன்
சிவையுதவு சொற்கொண்ட சேவையர் குலாதிபன்
சிறுதே ருருட்டி யருளே
சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்திடுனோன்
சிறுதே ருருட்டி யருளே. (கூ)

பண்புகெழு நின்சரித் திரமினிய பாவாற்
பரப்பிய திருக்கை லாய
பரம்பரை யுமாபதி சிவன்புகழு மவன்முன்னோர்
பைம்புகழு மவன் வழிவரு

நண்புபுனை தவர்புகழு மினிமேலும் வருபவர்
நயப்புகழு நீடு வாழ
நாடிவித நீசெய்த மாபுரா ணத்தமரு
நாயன்மார் பெருமை வாழ
விண்புகழு நாலவர்திரு வாய்மலர்ந் தருடிரா
விடவேத மென்றும் வாழ
மெய்யன்பி னின்னு லயப்பணி முதற்புரி
விருப்பமிக் கார்கள் வாழத்
திண்புவி யெடுத்தேத்து சேவையர் குலாதிபன்
சிறுதே ருருட்டி யருளே
சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்தினோன்
சிறுதே ருருட்டி யருளே (௰)

## சேக்கிழார் பிள்ளைத்தமிழ்

முற்றிற்று

திருச்சிற்றம்பலம்

# குன்றத்தூர்

# சேக்கிழார் பிள்ளைத்தமிழ்

## குறிப்புரை

குன்றத்தூர்: இது சேக்கிழார் நாயனார் அவதரித்த திருப்பதி; தொண்டைநாட்டில் உள்ளது; இதைச் சேர்ந்த நத்தத் திருமலையில் முருகப்பெருமான் திருக்கோயில்கொண் டெழுந்தருளியிருப்பர்; எனவே இது குன்றுதோராடலில் ஒன்றாம். இங்கு நாயனார் திருக்கோயில் ஒன்று தனியே உண்டு; இதனை யடுத்து வடக்கே நாயனாரது வழிபடு தலமாகிய திருநாகேச்சரம் உள்ளது. தென் இந்தியா இருப்புப்பாதைத் தொடரில் பல்லாவரத்தினின் றும் தென் மஹாராட்டிர இருப்புப்பாதைத் தொடரில் ஆவடியினின்றும் இத்தலங்கட்குச் செல்லலாகும்.

சேக்கிழார்:—இது நாயனாரது குடிப்பெயர். ரகுவின் மரபிற் றோன்றிய ராமன் ராகவன் என்று வழங்குமாறுபோல சேக்கிழாரது மரபிற்றோன்றிய இவர் சிறப்புப்பற்றி இப்பெயரினாலே யழைக்கப் பெற்றார். இவரைப் பற்றிய ஏனைய செய்திகளை வரலாற்றிற் காண்க.

பிள்ளைத்தமிழ்: இது பிள்ளைக்கவி யெனவுங் கூறப்பெறும். தமிழ்மொழியில் வழங்கும் பிரபந்தம் தொண்ணூற்றாறனுள் ஒன்று; ஆண்பாற் பிள்ளைக்கவி, பெண்பாற் பிள்ளைக்கவி என இருவகை

யினை யுடைத்து. ஆண்பாற் பிள்ளைக்கவி காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, சிறுபறை, சிற்றில், சிறு தேர் என்னும் இப்பருவங்களை முறையே அகவல் விருத்தத்தால் பப்பத்தாகக் கூறப்பெறுவதாம். பெண்பாற் பிள்ளைக்கவி மேற் கூறிய பருவங்களில் சிறுபறை, சிற்றில், சிறுதேர் என்னும் இவை களை யொழித்து, கழங்கு, அம்மானை, ஊசல் என்பவற்றைக் கூட்டி உரைக்கப்பெறுவதாம். இது வெண்பாப்பாட்டியலிற் கண்டது. இவ்வுறுப்புக்களில் சில விகற்பங்கள் வருவதும் உண்டு.

காப்பு: காவல்; காப்புக்கவியை உணர்த்துகின்றது; ஆகு பெயர். நூலாரம்பத்திற் கூறப்படும் கடவுள் வணக்கச் செய்யுள். இக்கவி பெரும்பாலும் விநாயகக்கடவுளையே பற்றியதாகும். அவரே வழிபட்டார்க்கு இன்னருளையும் வழிபடார்க்கு இடையூற்றையும் மிகுதியும் செய்வாராதலால். பிறசமயத்தவர் சமயக்காழ்ப்பு பற்றித் தங்களுக்கேற்ற கடவுளைக் கூறிக்கொள்வர்.

க. விநாயகக்கடவுள் திருமுடியிற் சூடிய பிறையும், ஒற்றைக் கொம்பும், திருக்கையிற் கோடாயுதமும், திருமார்பின் முத்து மாலையும், திருவயிற்றுக்கட்டும், திருவரையின் வெண்படாமும், திருவடியிற்கழலும் உடையராய்ப் பேருருக்கொண்டு நின்றபோது வானத்துள்ள வெண்பிறை அவருருவிலுள்ள பிறையோடும் கொம்போடும் கோடாயுதத்தோடும் கூடி இவ்விரண்டென்று சொல்ல உள்ளதென்றும், மாலையாயும், கட்டாயும், படாமாயும், கழலாயும் விளங்குமென்றுங் கூறியதென்க. கந்தபுராணத் "திக டசக்கரச் செம்முகம்" என்னுங் காப்புக்கவியின் ஞாயிற்றை விநாயகப்பெருமானது திருமார்பின் விளங்கும் பதக்கமணியாக கூறியதை ஒப்பு நோக்குக. மூத்த பிள்ளையார் கயமுக அவுணனைக் கொல்லுமாறு தமது ஒருகோட்டினை 'உடைத்துக் கையிற் கொண் டார் என்பது புராணம். சேக்கிழார் பெருமானும் 'நீண்முடிக் கடக்களிறு' எனப் பிள்ளையாரது பேருருவினை 'எடுக்குமாக்கதை'

என்னும் திருப்பாட்டிற் கூறியதும் கருதற்பாலது. உதரபந்தனம் திருவயிற்றுக்கட்டு-உதரம்-வயிறு; வடமொழி. பெருவயிறாதலின் கட்டுவேண்டுமென்க. படாம்-ஆடை. கழல்-வீரக்கழல்; நாதமய மான சிலம் பென்னலுமாம். ஏமேவும்-ஏமம்மேவும்; ஏமம்-ஏம் எனக் குறைந்துநின்றது. ஏமம்-பொன்; பொன்னம்பலம் கூறப்படு கிறது. ஞானசபை பூதவாகாயமான ஜடாகாயமன்றித் திருவருள் மயமான ஞானகாயமென்பது. மேனி ஈண்டு அசரீரி. மறை-தமி ழோத்து. அருளும் இயல்பு-திருவருட்டிறம். அம்முதல் - 'உலகெ லாம்' என்னும் இறைவனருளிய திருப்பாட்டு முதல். ஒன்ற-இயைய. வினையுருபுதொகல்-இடை நிலை, விகுதிமுதலியன வின் றிப் பகுதி யளவாய்நிற்றல். நான்கனடியாதி 'மலர்' செய்து - அமை த்து. அம்முதலோடு நான்கனடியாதி செய்தல். 'உலகெலாம் மலர்' எனப்பொருந்துமாறு செய்தல். நாற்சீர்-இவ்விருத்தத்துள்ள அடி யின் நான்குசீர். நாலெறி-அடிமைநெறி, மக்கள்நெறி, தோழர் நெறி, முன்னெறியாகிய நன்னெறி. இவைகளை வடநூலார் முறை யே தாசமார்க்கம், சத்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்பர். விளக்கல்-விளங்க அறிவுறுத்தல். ஒளிர்தல் : இருவருண் முறைகளை யெல்லாம் தமது அருளோத்துக்கொண்டு அறிய அறி வுறுக்கும் ஞானதேசிகராய் விளங்கிமிளிர்தல். பொன்னுன் மேய்ந்த சிற்சபையின் எழுந்தருளிய இறைவன் அசரீரியாக (வானிழலாக) எடுத்துக் கொடுத்துதவிய 'உலகெலாம்' என்னும் திருவாக்கினை (வெருளின் மெய்ம்மொழியைக்) கொண்டு தொடங்கி 'அளவடி நான்கின் கலிவிருத்தம்மே' என்னும் ஓத்துக்கியைய நான்கு சீரான் அமைந்து நான் கடியானும் கலிவிருத்தத்தால் இறைவன் தனது சொரூப தடத்தத் திருவுருவங்களால், சரியை கிரியை யோக ஞானங்களால் வழிபாடாற்றும் மூவகை யாருயிர் வருக்கங்கட் கெல்லாம் அருளும் அருட்டிறங்களனைத்தையும் ஒருங்கறிவுறுத்து வாழ்த்துவணக்கம் பொருளியல்பு என்னும் மூவகை முறையினையும் பாராட்டி மங்கல ஓத்தினையருளி விளங்கும் சேவையர் காவலரது

பிள்ளைக்கவி தழைக்குமாறு என்று பாட்டினது பிற்பகுதிக்கு பொருளியைத்துக்கொள்க. மலர்சிலம்படி என்பதற்கு மலர் போலும் சிலம்படி எனக் கொள்ளும் பொருள் ஆசிரியர் கருத்தன்று எனக் கவி விளக்குவது மிகவும் பாராட்டத்தக்கதாம்.

தருவயாக்கம்-குருவினைவணங்கல். குருவுக்கு வணக்கம் என்பதும் ஒன்று. குருமொழி அஞ்ஞான விருளைப்போக்கி ஞானவொளியைத்தருவோன் என்னும் பொருளினையுடையது. ஈண்டுக் குருவாவார் உமாபதி சிவம் என்க. இவர் சைவ சந்தான குரவருள் நான்காவதவராகவும், இறைவனிடத்து ஞானநூல் கேட்ட சைவ முதற்குரு நாதனாகிய திருநந்தி தேவரைத தொடங்கி (க. திருநந்தி தேவர், உ. சனத்குமார முனிவர், ௩. சத்திய ஞானதரிசினிகள், ௪. பரஞ்சோதிமா முனிவர், ௫. மெய்கண்டதேவர், ௬. அருணந்தி சிவாசாரியர், எ. மறை ஞானசம்பந்த சிவாசாரியர், அ. உமாபதி சிவாசாரியார் எனத்திருக்கைலாய பரம்பரையில்) எட்டாவதவராகவும், கோமுத்தி யெனவும் நவகோடி சித்தபுரம் எனவும் வழங்கும் திருவாவடுதுறை ஆதீனத்து ஞானதேசிகரா யெழுந்தருளியிருந்த சுப்பிரமணியதேசிக மூர்த்திகளுக்கு (க. உமாபதி சிவாசாரியார், உ. அருணமச்சிவாயர், ௩. சித்தர் சிவப்பிரகாசர், ௪. நமச்சிவாய மூர்த்திகள், ௫. மறைஞானதேசிகர், ௬. அம்பலவாணதேசிகர், எ. உருத்திரகோடிதேசிகர் அ. வேலப்பதேசிகர், ௯. முற்குமாரசுவாமி தேசிகர், ௰. பிற்குமாரசுவாமி தேசிகர், ௰க. மாசிலாமணி தேசிகர், ௰உ. இராமலிங்க தேசிகர், ௰௩. முன் வேலப்பதேசிகர், ௰௪. பின் வேலப்பதேசிகர், ௰௫. திருச்சிற்றம்பல தேசிகர், ௰௬. அம்பலவாண தேசிகர், ௰எ. சுப்பிரமணிய தேசிகர் ௰அ. அம்பலவாண தேசிகர், ௰௯. சுப்பிரமணியதேசிகர் எனவரும் முறையில்) முற்றூன்றும் பத்தொன்பதின்மராகவும் எழுந்தருளியிருந்த முறை கண்டுகொள்க. இவரை நூலாசிரியர். தமது ஆதீன பரம்பரையின் மேலேசொன்ன முறையிலும் சிவப்பிரகாசாதி எட்டு ஞான நூலருளிய முறையிலும் ஞானாசிரியராயமையும் பொது வகையா

னும், தமது பிள்ளைக்கவிக்கு முதனூலாகிய சேக்கிழார் புராணத்திற்கு முதனூலாசிரியரா யமையும் சிறப்பு வகையானும் குருவாகக் கொண்டு வணங்கினரென்க. அவையடக்கம் - தம்மினுங் கல்வி கேள்வி முதலியவற்றாற் சீரிய பெரியார்முன் தாம் அடங்கி நிற்றலையும், அவையமையாமையானே தருக்கி நிற்கும் ஏனையரை அடக்கியாளும் நிலையையும் மேற்கொண்டு கூறுங்கவி. ஈண்டு ஆசிரியர் குருவணக்கம் அவையடக்கம் என்னும் இரண்டினையும் ஒரேகவியிற் கூறிமுடித்தார். ஓங்குகயிலாயம் - ஊழிதோறுங் கெட்டொடுங்கும் ஏனையபதிகளும் மலைகளும் போலன்றி என்றும் நின்று ஓங்கிமிளிரும் கைலாயம் என்பது. இதனை 'ஊழிதோறூழி முற்று முயர்பொன் னொடித்தான்மலை' எனவரும் நம்பிதேவாரத்தானும், 'புரந்தராதி வானவர் பதம் போதுறை புத்தேள், பரந்த வான் பதஞ் சக்கரப் படையுடைப் பகவன், வரந்தவாது வாழ்பதமெலா நிலைகெட வருநா, ளுரந்தவாது நின்றூழி தோறோங்குமவ்வோங்கல்' எனவதனைத் தழுவவரும் புராணத்தானும் அறிக.

சிவபிரகாசம்-இது சைவசித்தாந்தசாத்திரம் பதினான்கனுள் ஒன்றாய், சிவஞான போதத்தை முதனூலாகவும், சிவஞான சித்தியாரை வழிநூலாகவும் கொண்டு அவற்றினது திட்ப நுட்பங்களையெல்லாம் விளக்கித் தன்னையோதலுறுவார்க்குச் சிவம் பிரகாசிக்கச் செய்யும் அவ்விரண்டினது புடைநூலாய் விளங்குவது. முதலிய-சிவப்பிரகாசத்தை முதலாகக் கொண்ட எட்டுநூல்கள். அவையாவன:—திருவருட்பயன், சிவப்பிரகாசம், வினாவெண்பா, போற்றிப்பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மைநெறி விளக்கம். சங்கற்பநிராகரணம் என்பனவாம். உமாபதி சிவனே விரித்துரைத்தான் என்று கூட்டிக்கொள்க.

குன்றைமேவுதல்-குன்றத்தூரில் எழுந்தருளியிருத்தல், குன்று தோறாடுதல்.ஏர்வளம்-உழவுவளம், அழகுவளம். பெருமையின் மேலாதல்-புகழின்மேம்படல், பெரிய மயிலின்மீது இவர்ந்து வருதல்.

மேலே கூறிய இருபொருள்களை முறையே சேக்கிழார் பெரும னுக்கும் முருகக்கடவுளுக்கும் ஆக்கிக்கொள்க. பின்வருவனவற்றை யும் இவ்வாறே செய்துகொள்க. துதிக்கை - துதித்தல், யானை துதிக்கை. ஓர் கோட்டத்தன்-புலியூர்க் கோட்டத்தை உடையவர் ஒரு கொம்பினையுடையவர். கோட்டத்தன் என்பதை விநாயகருக் குக் கொள்ளும் வழி அத்தினைச் சாரியை யாக்காது அத்தனைக் கொண்டு பிதாப்போன்றவன் எனலுமாம். சேக்கிழான் - சேக்கி ழான் என்னும் குடியினது இயற்பெயர், இடபத்திற்குரியார் அருண்மொழித்தேவர் நாயனாரது பிள்ளைத்திருநாமம். குழாம் கூட்டம்.

காப்புப்பருவம்-காப்பினைக் கூறும் பருவம். காப்பு-தெய்வங் களதுகாவல்; இஃது இரண்டாவது மாதத்திற் கூறப்படுவது திருமால் முதலிய கடவுளரது காப்புக் கூறுதலே பிள்ளைத்தமிழின் முறையாகவும் ஈண்டு நூலாசிரியர் சேக்கிழார் பெருமானைப் பாட்டுடைத்தலைவராகக் கொண்டாராதலின், அவர் அத்தெய்வங் களிற் பலரான் வழிபடும் பெற்றியாரன்றி வழிபடுபவரல்லர் என்னு முண்மையைக்கொண்டு அம்முறையை யொழித்து அவரான் மிகு தியும் வணங்கப்படும் பெற்றியாராகிய திருத்தொண்டர்களையே காப்புக் கடவுளர்களாகக் கொண்டு அன்னதொண்டர்களைத் திருத் தொண்டத் தொகைச் செய்யுண்முறையான் வைத்துக் கூறுகின்ற ரென்க.

க. ஆரூரர்-திருவாரூரில் திருக்கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கும் தியாகேசப்பெருமான். ஓரரைக்கால்-எட்டின் ஒருபகுதி. இது தம்மைவேண்டிய ஆளுடை நம்பிகளுக்குப் புற்றிடங் கொண்டபிரான் 'தில்லைவாழ்ந்தணர்த மடியார்க்கு மடியேன்' என அடியெடுத்துதவலின், அது அரைக்காற் பாட்டாதலானும் ஏனைய முக்கால் அரைக்காலையே நம்பியாரூரர் முடிவு செய்தலானும் இவ் வாறு கூறப்படுவதாயிற்று. நம்பியாரூரர் சுந்தரமூர்த்தி நாயனர், மாக்கவி - சிறந்தகவி. கவித்திசை - கவியினிடம்; திசை - இடம்,

வழுவரும் - வழு அரும்; வழு-குற்றம், அருமை-இல்லாமை. எழுவரும் - ஏழுநாயன்மார்களும்; அவர் தில்லைவாழந்தணர், திரு நீலகண்டர், இயற்பகையார், இளையான்குடிமாறர், மெய்ப்பொருளார், விறன்மிண்டர், அமர்நீதியார் என்பார். தழுவரும்-தழுவுதற்கு அரிய; தழுவ அரும் எனற்பாலது தழுவரும் எனக்குறைந்து நின்றது. தழால்-தழுவுதல். செய்தவரை - செய்து அவரை எனப் பிரிக்க. வரலாறு-கதை. சேக்கிழார்பெருமான் அம்பலவாணராகிய நடேசப்பிரான் தமக்கு முதலெடுத்துதவலின் அதனைப் பாராட்டி அவ் 'உலகெலாம்' என்பதனைத் தமது புராணத்து நடுவண் 'ஓதியேறினார் உய்யவுலகெலாம்' எனவும் (திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் புராணம் உகசு-ந் திருப்பாட்டு) ஈற்றின் 'நின்றதெங்கும் நிலவியுலகெலாம்' எனவும் (புராணத்திறுதித் திருப்பாட்டு) வைத்துக்கூறியது ஈண்டுபாராட்டப் பெற்றதையே ஆசிரியர் உலகெலாமெனுஞ் சுருதியை நாப்பண்ணுமீற்றும் பொருத்தியென்று கூறினரென்க. சைவபரிபாடைகளையும் சம்பிரதாயங்களையும் வருந்தோறுங் கண்டுகொள்க. புரத்தல்-காத்தல்.

உ. இலைமலியெனுங் கவி 'இலைமலி' என்பதனை முதலாகக் கொண்ட திருத்தொண்டத் தொகையின் இரண்டாந் திருப்பாட்டு. புவனம்-பூமி, ஆகுபெயர். பாசுதல்-துதித்தல். எழுமுனிவர்-சப்த விருடிகள். அமர்வார்-விரும்பப்படுவோர்; அமர்தல்-விரும்பல். எழு புரவி-'சப்தா' என்னுங் குதிரை. வையம்-தேர். எழுகதிர்-வினைத் தொகை. கதிர்-சூரியன். வட்குதல்-கெடுதல், பின்னிடல். எழு வுருவு - எஃகினுயதூண். உட்குதல் - அஞ்சுதல்; அஞ்சுதல் திரட்சியினும், வலியினும், பகைவரைக் கோறலினும் என்க. மலைமலி-மலி உவமஉருபு. எழுபவம்-எழுவகைப்பிறப்பு. எழுபவமும் மாய்த்த விறல்-பிறவிப் பெருங்கடனீந்தி யேறியவலிமை. எழுவோர் - எறிபத்தர், ஏனாதிநாதர், கண்ணப்பர், கலயர், மானக்கஞ்சாறர், அரிவாட்டாயர், ஆனாயர் என்போர். அடிக்கமலம்-உருவகம். அணியாக்குதல்-அழகு பொருந்தச் சூடிக்கொள்ளுதல். கலைக்கன்னி-

கலைகளுக் குரிமைபூண்ட நாமகள். ஏவல்கேட்டல்-அவர்வழி நின்று சொல்லியவாறு செய்தல்; சேக்கிழார் பெருமான் அருண் மொழித் தேவராய் கலைகள்யாவும் அவர் வேண்டாமையே வருவம் வருவம் என வருந்தன்மையராதலின் இவ்வாறு கூறியதென்க. கனகசபையார்-நடேசப்பிரான். முதல்கொடுத்தல்-அடியெடுத்துத வல்; சேக்கிழார் பெருமான் செய்யும் திருத்தொண்டர் புராண வியாபாரத்துக்குச் சிவபெருமான் முதலுதவினுரென்னும் நயங் காண்க. மகத்துவம்-பெருமை. இருந்தும்-உம்மை எதிரதுதழீயது. அலைமலி சுணங்கன் ஒப்பேன் என்றது 'தெரிவரும் பெருமைத் திருத்தொண்டர்' என்னும் பாயிரக்கவியிற் கூறும் 'தண்கடலூற் றும் பெருநசை ஒருசுணங்கனை யொக்கும் தகைமை யேன்' என்று கூறியதை. அலை-கடல்; ஆகுபெயர். 'ஆம் பெருக்கத்து வேண்டு மான்ற பணிவெனு மொழி' யென்றது "பெருக்கத்து வேண் டும் பணிதல் சிறிய, சுருக்கத்து வேண்டு முயர்வு" என்னுந் திருக்குறட்பாவினை. (திருக்குறள் - ஒழிபியல் - மானம் - கஎ-ம் அதிகாரம்) பொருள் தேற்றுதல் - அப்பணிவினை வாய்மொழி யாகக் கழியாது தம் மொழுக்கத்துக் . கொண்டொழுகிப் பிறரை யவ்வழி நிறுத்தல். பெரும்புலவர் அனைவரும் வணங்கு மாறும், கலைமகள் ஏவல் கேட்குமாறும், இறைவன் அடிகொடுத் துதவுமாறும் பெருமை வாய்ந்தவராயிருந்தும் 'பெருக்கத்து' என் னுந் திருக்குறள் கூறும் இலக்கணம் வாய்ந்தும் நாய்த்தன்மை யுடையேன் என்று அவை யடக்கம் கூறிய பெரும்பணிவினை யுடைய குன்றை நகராளி என்பது கவியினது பிற்பகுதியின் திரண்டபொருள்.

௩. மும்மைமறை - மும்மை மூன்று என்னும் பொருளில் வந்தது. வேதம் இருக்கு, யசுர், சாமம், அதர்வம் என நான்கா வும் மூன்றென்பது நான்காவதாகிய அதர்வம் ஏனைய மூன்றனுள் அடங்குவதாதலின். இதுபற்றியன்றே வேதத்திற்குத் 'திரயீ' என ஒருபெயரும் வழங்கலாயிற்றென்க. மும்மையுலகம்-சுவர்க்கம், மத்

யம், பாதலம் என்னும் வகையானுயது. மும்மையாப்பு-'மும்மையா லுலகாண்ட' என்னும் மூன்றுந் திருப்பாட்டு. அகரம் ஊர்ந்தசவ்வை முதலாகக்கொண்ட நாமமுடையார் சண்டேசர், இகரம் ஊர்ந்த தவ்வை முதலாகக்கொண்ட நாமமுடையார் திருநாளைப்போவார், திருக்குறிப்புத் தொண்டர், உகரத்தை முதலாகக்கொண்ட நாம முடையார் உருத்திர பசுபதியார், உகரம் ஊர்ந்த மவ்வை முதலாக உடையநாமமுடையார் மூர்த்தியார் என்று அகரமாதி மும்மையுயிர் குறினெடிறனித்தும் மதசவ்வூர்ந்தும் முதலமையும் நாம முற்றூர் என்பதை வகை செய்துகொள்க. செம்மை-வளவிய செல்வம். மும்மையாம் வருணம்-வைசியகுலம். இரு மும்மையார்-மேலே எழுத்துவகையாற் கூறிய அறுவர். இம்மூன்றும் அடியில் திரு ஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி என்னும் மூவர் முதலிகளுக்கும் சேக்கிழார் பெருமானைச் சிலேடைவகையால் உவமைசெய்தலை உய்த்துணர்க. சிவபாத இருதயர்-பிள்ளையாரின் திருத்தந்தையார், சிவனடியைச் சிந்தைவைத்தவர். ஒண்பொருள்-ஒளியுற்ற குழந்தை, ஒள்ளியபொருள். உழவாரவலம்-உழவாரப் பணியின்வன்மை, உழவு தொழிலின் மேம்பாடு. நாவலர்பிரான-திருநாவலூரராகிய சுந்தரமூர்த்திகள், கவிகளின் மேம்பாடுடையர் வெம்மை-பாண்டியரது வெப்பம். தவிர்தல்-நீக்குதல், தாமே பிறவி வெம்மை நீங்கியவரென்றுமாம்.) புகலியார்-திருஞான சம்பந்தர்; புகலி-சீகாழியினது ஓர் பெயர். வேதத்தமிழ்-தமிழ்வேதமாகிய தேவாரம்.

௪. நீற்றறை - சுண்ணும்புக் காளவாய். அருகந்தர் - சமணர். மறக்கல் - பாவமாகியகல். முதலடியில் நீற்றறையில் வைக்கப்பட்ட வர் வேகாமல் வைத்தவர் சிந்தை வெந்தும், கடலில் இடப்பட்ட வர் ஆழாமல் இட்டவர் பாவக்கடலில் ஆழ்ந்தும் வருந்துவது கூறும் அழகுகாண்க. கருநின்ற கண்டர்-நீல கண்டர். நாவரசர் - வாகீசர். எழுவோர்-திருநாவுக்கரயர், குலச்சிறையார், மிழலைக் குறும்பர் காரைக்காலம்மையார், அப்பூதியடிகள், திருநீலநக்கர், நமிநந்தியடி

கள் என்பேராவர். அருத்தி-விருப்பம். தரு - கற்பகத் தரு. சேக்கிழார் பெருமான் தமது திருக்கைகளைக் குவித்து வணங்குமுன் பெண்ணொருபாகத் திறைவன் திருத்தொண்டபுராணப் பொருளனைத்தையும் அவர் மனவறையிற் குவித்து விட்டனர் என்பது மூன்றாம் அடியின் திரண்டபொருள். புலியூர்க்கோட்டத்துக் குன்றத்தூரில் அவதரித்துத் தில்லைத்திருக்கோயில் எய்திப் புராணம் விரித்துப் பாடி யுலகேத்த நின்றார் என்பது நான்காம் அடியிற் கருதியது.

ரு. வம்பறாயாப்பு-'வம்பறாவரிவண்டு' என்னும் ஐந்தாம் திருப்பாட்டு. வம்பறாமுலை - வம்பு-கச்சு. பிரமசரிய நிலை-வேதமோதுங் காலம், பிரமம் - வேதம், மடப்பாவை - பூம்பாவையார். பிரமசரிய நிலையினின்றும் பெண்ணைப் பிறப்பித்தது அதிசயம் என்றபடி. பிறப்பித்தல், ஈண்டு என்பைப் பெண்ணாக்குதல். உம்பல்தாவும் திறல் அரிக்குருளை - யானையைப்பாய்ந்து கொல்லும் வன்மை வாய்ந்த சிங்கக்குட்டி. யார்க்கும் - உம்மை முற்றும்மை. உலாயவர்-திருஞான சம்பந்தர்; பரசமய கோளரி என்பது ஈண்டு கருதியதாம். ஐவர் - பொறிவாயிற் செல்லும் ஐந்திந்திரியங்கள். அவரை வெல்லுதல் - பொறிவாயிலைந்தவித்தல். அறுவர்-திருஞானசம்பந்தர், கலிக்காமர், திருமூலர், தண்டியடிகள், மூர்க்கர், சோமாசிமாறர். அம்பறாவாழி - நீர்நிறைந்தகடல். உண்டதிருமுனிவர் - அகத்தியர். தன்னோடு போர் செய்து கடலில் ஒடியொளித்த விருத்திராசுரன் வெளிப்படுமாறு இந்திரன் தம்மை வேண்ட அகத்தியர்கடலை யுண்டன ரென்பது புராணம். அகத்தியர் தமிழ் விரித்தருளியதை 'என்றுமுள தென்றமிழ் இயம்பி யிசை கொண்டான்' என்னும் இராமாயணத்தானுமறிக. மூவர் அருண்மறை - தமிழ் வேதமாகிய தேவாரம். ஒருவர்-சிவபெருமான். வித்யாரணிய முனிவர் - வேத பாடியங் கண்டவர்.

சா. சாக்கிய நாயனார் தமிழ் வேதமுடைய திருநாவுக்கரசராலும் 'புத்தன் மறவாதோடி எறிசலவி புதுமலர்கள் ஆக்கினான் காண்'

எனப் போற்றப் படுதல் காண்க. சங்கமங்கை - சாக்கியர் அவதரித்த பதி; காஞ்சிபுரத்திற்கு அருகிலுள்ளது. 'புகழ்' அடைமொழியாக் கொண்டவர் - சிறப்புலி நாயனூர்; 'கொடை' அடைமொழியாக் கொண்டவர் - கழறிற்றறிவார் நாயனூர்; 'வேல்' 'நகர்' இரண்டும் அடைமொழியாக் கொண்டவர் கூற்றுவ நாயனூர்; அடைமொழி சேராதவர் - சாக்கிய நாயனூர்; 'நகர்' அடைமொழியாக் கொண்டவர்-சிறுத்தொண்ட நாயனூரும், கணநாத நாயனூரும் ஆக அறுவரைக் காண்க. இறுவரை-சாம்வரை. சிந்தாமணி-பஞ்சகாவியத்துவைத்து எண்ணப்படும் சமணகாப்பியம். வளவர்கோன்-அநபாய சோழர். அமைச்சர் பண்பு-அமைச்சர் செயல்; தமக்குக் கேடுவருவதெனினும் மன்னர்க்கு உறுதிபயப்பதை இடித்துரைத்தல் அமைச்சர் கடன் என்பது கருதியது.

எ. ஞானப் போதநூல் - வேதாந்தத் தெளிவாஞ் சைவ சித்தாந்த முறைக்கும் நூல்கள். உணர்பு-உணர்ந்து; செய்பு என்னும் வாய்பாடு. புரகரன் - புரத்தை அழித்தவன், வடமொழி. சங்கப் புலவர் - கடைச்சங்கத்துப் புலவர்; இவரே பொய்யடிமை இல்லாத புலவர். வித்தக ஒழுக்கம்-ஞான நெறி. எண்மர் பொய்யடிமையில்லாத புலவர், புகழ்ச் சோழர், நரசிங்க முனையரையர், அதிபத்தர், கலிக்கம்பர், கலியர், சத்தியார், ஐயடிகள்காடவர்கோன் என்பார். மலராதனம் - திருவுந்தியந் தாமரை. படைத்ததே - நான்முகக் கடவுள். வலர் - வல்லர்; இடைக்குறை. வேளாண் குலக்கதிர் - வேளாளர் குலத்திற்கு ஞாயிறு போன்றவர்.

அ. ஐந்ததிகாரி - படைப்பு, காப்பு, அழிப்பு, மறைவு, அருள் என்னும் ஐந்தொழிற்கு முறையே உரியவர்களாகிய நான்முகன், திருமால், சீகண்டர், மயேச்சுரர், சதாசிவர். மேல் அதிகாரி - இவர்களை அதிட்டித்து நிற்கும் இறைவனாகிய சிவபெருமான். கலந்திருக்கவும் நிருவிகாரி யென்றது - காமவிகாரமில்லாதவனென்பது. நிரகங்காரி - அகங்கார முதலாகிய தத்துவங்கடந்தவன். காரியாகாரி - விடமுண்டவன், காரி விடம். கருமவடி

வுடையரென்பது இறைமைக் குணத்திற்குப் பொருத்தமின்றென்க. மறைக்கண்டருஞ் சோதி-மறைக்கும் நெருங்குதற்கு அரிய ஞான வடிவினர். ஓங்காரி - பிரணவ வாச்சியர். அருளேய வாங்காரி - அருட்சத்தியைக் கொண்டு காரியஞ் செய்பவர். 'ஓங்காரியென்பாளவளொரு பெண்பிள்ளை, நீங்காத பச்சை நிறத்தை யுடையவள், ஆங்காரி யாகியே இவரைப் பெற்றிட்டு, ரீங்காரத் துள்ளே இனிதமர்ந்தாளே' என்னும் திருமந்திரம் காண்க. இவர் - கணம் புல்லர், காரியார், நெடுமாறர், வாயிலார், முனையடுவார் என்பார். பெட்பப் பெருக்கு - உவகைக்கண்ணீர். பாலாற்றலை - ஆறும் வேற்றுமை. வளை - சங்கு. துறைக் கண்ட - துறைக்கு அண்டவென்று பிரிக்க. கந்தியஞ் சோலை - அழகிய கமுகஞ் சோலை. பாலறாவாயர் - சேக்கிழார் பெருமானது திருத்தம்பியார். முற்றோன்றல்-முற்பிறந்தார், தமையன்.

௬. அறஞ்சூழ்ந்த நெஞ்ச-அறங்கிடந்த சிந்தை. மன்றிக் கழியா மடம் - உடன்றோன்றி நீங்காத அறியாமை, ஆணவமலம். கழிதல் - நீங்குதல். கருத்துணைதல் - சிந்தை நைதல், கருத்து உள் நைத என்பதும் ஒன்று. அரில்விடல் - குற்றம் நீங்கல். இகழ்த்துணை பெறாமை - இகழ்ச்சி அற்பமு மில்லாதவராதல். வயம் - வெற்றி. வேள் - வேளாண்மை. புலி - புலி போன்றவர். இவர் - மேலே கூறிய இவர். குரவு-ஆசிரியத்தன்மை, குருவின்மாண்பு. ஜாதியடையாளம் - வேளாளர் மாலை, குவளை; இது ஆசிரியர்க்கு முரியது என்பது. நிலத்தலைவரும் - தில்லை வாழந்தணராய மறையவர் முதல் எல்லா வருணத்தவரும், உமாபதி சிவமாகிய எல்லா ஆச்சிமத்தவரும் என்பது கருதுக.

௭. இருபைங்கோதையார் - பரவையார், சங்கிலியார். வேடடல் - மணம் புரிதல். இணக்கம் - பொருத்தம். இருபுதல்வியார் சிங்கடியார், வனப்பகையார் என்பார். பயவாமற் பயந்தமை - மகவமை கொண்டமை; ஆளுடைய நம்பிகள் திருநாட்டியத்தான் குடியெழுந்தருளியபோது கோட்புலியாரது இவ்விருமக்களையும் தம.

பெண்களாகக் கொண்டமை. இது இவர் தம்மைத் தமது பல பதி கங்களில் வனப்பகையப்பன், சிங்கடி தந்தை என்பனவாதியாகக் கொண்டு கூறியதிற் காணப் பெறும். சுத்தராய் - மனந்தூயராய் என்பது; இவர் பெற்ற சிற்றின்பமே பேரின்பமா முற்றவந்த பெரிய ராய்த் தம் திருமனைவியாரிடத்தும் போகந் தோயாது தோய்ந்தும், தமது மக்களைக் கோட்புலியார் பணியின் பொருட்டுக் கொள் ளக் கொடுத்தபோதும் மறுத்து மகண்மை கொண்டும், சிவாக்ஞை வழிவந்த இருவரொழித் தொழிந்த ஏனையரிடத்துச் சித்தமுஞ் செல்லாத சேட்சியராய் சிவயோகம் பயின்றும் வதிந்தவர் என்பது காண்க. சுத்தராய் - சுத்தர் ஆராய்கின்ற என்று வைத்து பெரு மிழலைக் குறும்பர் முதலிய சுத்த யோகிகளும் போற்றும் மாட்சி யர் என்று கொள்வதுமாண்பே. வன்றொண்டு-சாம்சித்தராய் விதி விலக்கிறந்து சாக்கிரத்துத் துரியாதீதம் புரிகின்ற பெருந் தொண்டு. இன் தொண்டு-இனியதொண்டு. தொகையுளார்-திருக்கூட்டத்தவ ராய தொகையடியார். எழுவகையுளார் - பத்தராய்ப் பணிவார், பர மனையே பாடுவார், சித்தம் சிவன்பாலே சேர்த்தார், திருவாரூர்ப் பிறந்தார், முப்போதும் திருமேனி தீண்டுவார், முழுநீறு பூசிய முனிவர், அப்பாலுமடிச்சார்ந்தார் என்பார். இவரோடு தில்லைவா ழந்தணரையும், பொய்யடிமையில்லாத புலவரையும் சேர்த்துத் தொகையடியார் ஒன்பதின்மரென்ப. நித்தர் - முதனடுவிறுதி யில் லாதவர். நிலவொளியென நீற்றினை நிறையப்பூசி அடையாள மாலை யாகிய குவளைமாலையையும் அக்கமணி மாலையையும் பூண்டு பிரம னென்ன விளங்கும் சேக்கிழார் பெருமான் என்று பொருள் கொள்ளுக. நீற்றினது வெண்மை நிலவினது வெண்மையென மயக்கம் செய்கின்றது. நிரம்பவுண அளியடைதல் - நிரம்பத்தேனை யுண்ண வண்டுகள் அடைதல். அத்தர்-சிவபெருமான். அத்தர் ஆய்- இறைவனுக்கு உரிய. கண்மணி-உருத்திராக்கம். அம்புயத்தவன்- அழகிய புயத்தை யுடையோன், பிரமன் என இரு பொருள் கொள்க. நம்புதல் - விரும்புதல்.

௰௧. ஆகாரமுதலிய மறந்து-உணவு முதலிய ஒழிந்து. இராப் பகல்-அல்லும் பகலும். நோக்காத வண்ணம்-கண்ணுற்காணக் கூடா தபடி, மனத்தின் அமைத்த கோயிலானது பற்றியென்க. பிறதளி-காடவர்கோன் கச்சியிலெடுத்த கற்றளி. பாமர் அடைந்த என்று கூட்டுக. அடைதல் - விரும்பி எழுந்தருளினமை. வித்தகர் - ஞானமூர்த்தி. எழுவோர் - பூசலார், மானியார், நேசர், கோச் செங் கண்ணர், நீலகண்டப்பாணர், சடையர், இசை ஞானியார். தொகை - திருத்தொண்டத் தொகையாகிய தொகைநூல்; வகை-திருவந்தாதியாகிய வகைநூல். முதலாதல்-முதனூலாதல். முதற்பகர் சைவர் - ஆதிசைவர்; ஆளுடைய நம்பிகளும் நம்பியாண்டார் நம்பி களும் ஆதிசைவரென்க. விரி-விரிநூல், இறுதி - பிற்பாடியநூல்; சேக்கிழார் அருளிய திருத்தொண்டர் புராணம். இறுதியார் எனப் படுசைவர் - நான்காவது வருணத்தவராகிய வேளாளர்; இவர் அவாந்தர சைவர் எனப்படுதலால். இப்படியன்றி அநாதிசைவர், ஆதிசைவர், மகா சைவர், அநு சைவர், அவாந்தர சைவர், பிரவர சைவர், அந்திய சைவர் என்னும் எழுவகைச் சைவ பேதத்துள் ஈற் றதைவைத்துக் கருதுதல் பொருந்தாமையறிக. தூவாய்-தூயவாய், சிவகாரணமாய திருவாக்கு.

---

செங்கீரைப் பருவம். இப் பருவச்செயல்கள் ஐந்தா மாதத் தில் நிகழுவன வாகும். செங்கீரை - செவ்விய கீரையுடையது. கீர் - சொல். செவ்விய சொல்லைச் சொல்லும் பருவமென்க. செங் கீரையாடுதல்-ஒரு காலை மடக்கி ஒரு காலை நீட்டி யிருகைகளையும நிலத்திலூன்றிக் கொண்டு தலை நிமிர்ந்து முகமசையவாடுதல். இதனையாசிரியர் முதற் செய்யுளின் விளக்கிக் கூறுவது காண்க.

௧. பொதுவகம் - சபையிடம்; சபை ஈண்டு கனக சபை. உல கெலாம் உய்ய - உலகம் யாவும் பிழைக்கும்படி. 'உலகெலாம்'- சேக்கிழார் பெருமானுக்கு இறைவன் அசரீரியாக எடுத்துதவிய முதல். அமுதம் - வாயூறல். நெற்றிநீறும் காதிருங்குழையும் முறை

யே நிலவையும் சூரிய கிரணத்தையும் எறித்தன வென்றபடி. வானளவுமொச்சி - வானுறவோங்கிய மதில்.

உ. நிரம்பு சொற்கள் - நிறைமொழி, பயனிறைந்த சொற்கள். சொற்பொலிவு பொருட்பொலிவு முதலிய வெல்லாம் நிறைந்த வென்பது. விருப்பம் - விருப்பத்தால், மூன்றனுருபு தொக்கது. மழவு - இளமை; இது ஆகு பெயராய்ப் பிள்ளையை யுணர்த்தியது. வாய் புகல்குதலை மழலை யென்பதை குதலை மழலை வாய்புகல் என்று மாற்றியுரைக்க. பயன் கொளவலேம் - பொருள் கொள்ள வல்லோம். வலேம் - தன்மைப் பன்மை முற்று. சான்று - கரி, சாக்ஷி. செப்பலுற்ற பொருள் என்ற கவி - 'செப்ப லுற்ற பொருளின் சிறப்பினல், அப்பொ ருட்குரை யாவருங் கொள்வரால், இப்பொ ருட்கென் னுரைசிறி தாயினு, மெய்ப்பொ ருட்குரி யார்கொள்வர் மேன்மையால்' இது திருத்தொண்டர் புராணத்துப் பாயிரத்துள்ளது; இதனில் 'பொருள்' என்பதைப் 'பிள்ளை' என்றும் 'கூறும் பொருள்' என்றும் பொருள் கொண்டு மழலைச் சொல்லைப் பேசுகின்ற பிள்ளையினது சிறப்புப்பற்றி பொருள் பயவாத சொற்களுக்கும் பொருள் கொள்வார்கள் என்றும் சொல்லத் தொடங்கிய நுதலிய பொருளின் சிறப்புப் பற்றி என் உரை சிறிதாயினும் அதனைப் பெரிதாக் கொள்வார் என்றும் உரைத்துக் கொள்க. சொற்பயன் உணராத போது ஒதி யாவது இல்லை என்பது பொருள். மழவாவுவப்பது - குழந்தை யாகக் கொண்டு மகிழ்வது. ஆமே - ஆவது திண்ணம்; ஏகாரம் தேற்றம்.

ங. நுட்பம்-நுண்மை; குறிப்பாற்பொருளுணரப் படுந்தன்மை. திட்பம்-வலியுடைமை, வினைத்திட்பம் என்பதிற் காண்க. அருட்டம்-அருளும் தண்மை; தண்ணிய அருட்டன்மை. பொருளணிச் சிறப்பு - பொருட்சிறப்பு அணிச்சிறப்பு என்று கூட்டியுரைக்க. மந் தணம் - இரகசியம், மறைபொருள். வெள்ளிடைத்தவிரும் வெற் பென-வெளியிடத்துத் தங்கும் மலைபோல, வெள்ளிடைமலைபோல,

தவிர்தல் - தங்குதல்; எளிதில் விளங்குதல் ஈண்டுக் கருதியது. திருத்தொண்டத் தொகையாகிய தமிழ் மறையில் உள்ள திட்பம் நுட்பம் பொருளணிச் சிறப்பு மந்தணம் முதலியவற்றை யெல்லாம் அநபாய சோழரது அவையினுள்ளோர் நயந்து வியந்து மெய்ப் பாட்டினோடு பாராட்டிக் கேட்குமாறு பொருள் விரித்துரைத்தார் என்பது புராணம். மெய்ப்பாடு - தாம் அறிந்த குறிப்பு வெளிப் படுக்குந் தோற்றம்; இது கண்ணீர் அரும்பல், மெய்ம்மயிர் சிலிர்த் தல் முதலியவற்றான் நிகழ்வதாகும்.

௪. தூயஒளி - தூவிய ஒளி. இருடபும் - இருளைக் கெடுக்கும். உய்த்தனம் - அனுப்புகின்றோம். நிருவாணதீக்கை - முத்திக்கேது வாய தீக்கை; நிருவாணம்-மோக்கம், முத்தி; இது சமய விசேடங் கட்குமேல் மூன்றாவதாகச் செய்யப்படும் சிவசம்ஸ்காரம். திரு முகம் - "அடியார்க் கெளியன் சிற்றம்பலவன் கொற்றங், குடியார்க் கெழுதிய கைச்சீட்டு - படியின்மிசை, பெத்தான் சாம்பானுக்குப் பேதமறத் தீக்கைசெய்து, முத்தி கொடுக்க முறை" என்பது. உய்த் திடப் பெற்ற - கிடைக்கப்பெற்ற. மெய்ஞ்ஞான அற்புதம் - ஞான குரவராய் எழுந்தருளியிருந்து செய்தருளிய பல வியக்கத்தகும் செய்கைகள். அவை: திருமுகங்கொண்டு பெத்தான் சாம்பானுக்கு முத்தி கொடுத்தல், கவி கூறிக் கொடியேற்றுதல், இவர் பாடி யருளிய கோயிற் புராணத்தை இறைவன் பாராட்டிப் பேழையி னுள்ளோம் என்று கூறல் முதலிய பலவாம். நிலயம் - இருப்பிடம். நினது வரலாறு-தேவரீரது சரித்திரம். உமாபதிசிவன் அருள் செய என்று கூட்டியுரைக்க.

௫. ஆயிரமுகம்-பலமுகம்; ஆயிரம் பலவென்னும் பொருட்டு. கங்கை ஆயிரமுகமாக இறைவன் திருச்சென்னியில் இறங்கிய தென்பதை 'கயல்பாயக் கடுங்கலுழிக் கங்கைநங்கை ஆயிரமா முகத்தினொடுவானிற்றோன்றும், புயல்பாயச் சடைவிரித்த பொற்பு தோன்றும் பொழிறிகழும் பூவணத்தெம் புனிதனார்க்கே' என்னும் ஆளுடையாசின் வாக்காற் காண்க. கங்கைமரபு-வேளாளகுலம்.

கதிர்கள் பொலியாயிர முற்றவன் - சூரியன்; சூரியனுக்கு ஆயிரங் கதிரோனென்னும் பெயருண்மையறிக. வேளாளகுல திலகர் என்பது கருத்து. ஆயிரமறை-வேதம் அளவில்லன என்பது சித்தாந்தம். சென்னி ஆயிரமுடையோன் - 'ஆயிரஞாயிறுபோலும் ஆயிரம் நீண்முடியானும்' என்பது தமிழ்மறை. ஆயிரம்கானிறீஇய மண்டபம் - ஆயிரக்கால் மண்டபம். ஆயிரம் தொண்டர் - அளவிலா அடியார்கள். வாய்மலர்ந்தவ - விளிவேற்றுமை. வாவிவாய்-வாய் ஏழனுருபு. கொழு - நிணம். புலவு - புலால் நாற்றம். இருஞ் சங் கனம் பேடெனா - அன்னம் இருஞ் சங்கினைப் பேடென்று. செருந்து-செருந்தி.

சு. தொம்பல - பலகுற்றம்; காம வெகுளி மயக்கம் என்னும் முக்குற்ற முதலிய. சுடர் சினகரம் என்று இயையும். தூகேம் மெழுகேம் - 'கோமானின் றிருக்கோயில் தூகேம் மெழுகேம்' என்னுந் திருவாசகம் காண்க. நயத்தல்-விரும்புதல். கூம்பல்-குவிதல். கூம்பல்செய் கை-அஞ்சலிசெய்தகை. அது-விரும்புங்கூலி. ஆம்பல் அவாவுதன் மேயபுயாசல-குவளை மலர்மாலை யணிந்த தோள்களை யுடையவரே. புயாசலம்-உருவகாலங்காரம். அருளாகரன்-அருட் கடலுருவன்; ஆகரம்-கடல்.

எ. புண்ணியமுதல்-புண்ணியம் வடிவுகொண் டனையார். பொங்கொளிமணியே - ஒளிவீசிமிளிரும் மணிபோன்ற ஞான தேசினை உடையார். பொய்யாவாழ்வு - நிலைபெற்ற உண்மையான வாழ்வு. பொள்ளலில் முத்து-தோளாமுத்து. புரை - குற்றம், உண் ணத் தெவிட்டுதல் குற்றமாம். மண்ணியல்-மண்ணில் உறைகின்ற. சத்துவம் - சுத்த சத்துவம். பொத்திய - மூடிப்போர்த்த. சாடுதல்-கெடுத்தல், போக்குதல். பத்திரசம்-அன்புச்சுவை. கனிகனி-வினைத் தொகை. அண்ணிய - நெருங்கிய. தெருள்-தெளிவு. சேவையர்-சேக்கிழார் மரபினர்.

அ. சூழியமேவிய - உச்சிமேவிய. சுட்டி-நெற்றிச்சுட்டி, நுதலணி. நிலாக்காலுதல்-ஒளிவீசுதல். வடிகாதிற் புனைகுழை-காதிற்

புனைந்த வடிகுழை. வீழி அவாவிய-வீழிக்கனியினை யொத்த; வீழி-வீழிச்செடியின்கனி. வீழியைத் தலவிருக்கமாவுடைய மிழலை வீழி மிழலை. அகத்தமர்தல்-அகத்தினைக் கோயிலாக் கொள்ளுதல்; 'நினைப்பவர்மனங் கோயிலாக்கொண்டவன்' என்பது தமிழ் மறை.

கூ. இலறத்து-இல்லறத்து; லகரம் தொகுத்தல் விகாரம். கவர் மனம்-வஞ்ச நெஞ்சு. தவர்-தவத்தின் நின்றொழுகியார். உணரா-செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். இறைவன் தக்கன அருளினன் என்று மாற்றுக. தக்கன-அவரவர்க்குத்தக்க அருட்டிறம். அவனே-இறைவனே. சாற்றியபடி-சொல்லியவாறு. இறைவன் அவ்வப்போது உணர்த்த உணர்த்த உணர்ந்து சொல்ல வல்லனாய் இறைவனுகவே இருந்து சொன்னான் என்பது கருத்தாகக் கொள்க.

ம. நந்திவரை-நந்திமலை, நந்திதுருக்கம் எனவழங்குப. தலை-ஏழனுருபு. ஒருமுனி-வசிட்டன். சுரபி-தெய்வப்பசு; காமதேனு வென்க. அங்கங்கு ஒடுபு நிறையாவென்று முடிக்க. நிறையா-நிறைத்து. ஆக்குபு - ஆக்கி, செய்பு என்னும் வாய்பாட்டு எச்சம். சூரிக்கடல் - வன்மைவாய்ந்தகடல். மாயோன் - விட்டுணுமூர்த்தி. நந்தி மலையில் சுரபி பொழிந்த பால் ஆறுப்பெருகி ஓடி நடுவணுள்ள கிணறு குளம் முதலியவற்றை நிறைத்துக் கடலில் வீழ்ந்து பாற்கடலாக்கி இதுதானே விட்டுணுமூர்த்தி துயிலும்பாற்கடல் என மயங்கச்செய்யும் என்பது பொருளாகக் கொள்க.

தாலப் பருவம். தாலாட்டுக் கூறும் பருவம். ஏழாம் மாதத்தில் நிகழ்வது. தால் - தாலு, நா - நாக்கு. நாவினாற் கூறப்பெறும் தாலாட்டு.

க. வெண்நந்து-வெண்ணிறமாகிய சங்கு. உரறல்-ஒலித்தல். வயிறு உளைதல்-கருவுயிர்க்க வயிறு நோதல். வெள்வாய்க் களமர்-கள்ளுண்ணலானும் காமமுயக்கத்தானும் வெளுத்த வாயினை

யுடைய களமர் என்பது; களமர் - உழுநர். வண்ணம்-நிறம். துவர்-பவளம். வாயோதிமம் - வாயினையுடைய ஓதிமம்; ஓதிமம்-அன்னப் பறவை. முதிரா வெயில் - இளவெய்யில். கண்ணூற உண்டல்-கள்ளினை அறிவுஞ் செயலுங்கெட வுண்ணுதல்; 'சத்தியை வேண்டிச் சமயத்தோர் கள்ளுண்பர், சத்தி யழிந்தது தம்மை மறத்தலால்' என்பது திருமந்திரம். மராளம் - அன்னம். துறை - நீர்த்துறை. சகலாகமம் - எல்லாக்கலைகளும்; ஈண்டு ஆகமம் பொதுவாக வேத முதலிய பல கலைகளையும் உணர்த்துகின்ற தென்க. தெய்வம்-தெய்வத்தினது தன்மை.

உ. நண்பு - விருப்பம். அரமுழக்கம்-அரன் நாமத்தை முழங்குதல்; அரன்-ஆன்மாக்களது பாவங்களை அழிக்கும் சிவன். புலவர் அமுதுகொள என்பதை அறிஞர் சோறுண்ண வென்றும், தேவர் அமுதம் உண்ணவென்றும், அரம்பை எழுதல் என்பதை வாழைகள் ஓங்கி வளர்தல் என்றும், விண்ணுலகத்து அரம்பை வந்து சேர்தல் என்றும், நாகேசன் வைகுதல் என்பதை திருநாகேச்சுரத்துத் திருக்கோயில் கொண்டெழுந் தருளியிருக்கும் நாகேச்சுரராகிய இறைவரது வாசம் என்றும், பாம்பாசனாகிய சேடன் உறைவு என்றும், திருமடந்தை காமுறல் என்பதைச் செல்வம் விரும்பி நிலைபெற லென்றும், இலக்குமி விரும்புதல் என்றும் கருமால் கிடந்து கண்டுயிலல் என்பதைக் கரியமேகங்கள் தவழ்ந்து தங்குதல் என்றும், கரிய திருமால் அரிதுயில் அமர்தல் என்றும் இரட்டுற மொழிந்து குன்றை பாற்கடலை ஒத்தலைக் காண்க.

ந. சூளிகை-அரமியம். இமைத்தல் - இமைத்தலை; இமைத்தல் - ஒளிவிடுதல். விதி-பிரமன். நந்த-மிக. இது - குன்றைநகர். பொன்னுலகினும் மிக்கிமைத்தலை விதி உளத்தில் எண்ணி விழியிமைத்தல் நந்தச் செய்தான் என்று முடிக்க. சந்தத்தவர்-கவிகள்.

ச. முரிவில் - முரிவில்லாத. கரு நீலம்-கருநிற நீலம்; செம்பு பழுத்த செந்நிற நீலமும் உண்டாதலின் கருமை அடை வந்தது

என்க. வில் - ஒளி. துகிர் - பவழம். அஃது - அக் குன்றைநகர். விட்டுணு மூர்த்தி வெண்ணிற முடையர், கடல்கடைந்தபோது ஆலம் அவரைக் கருநிறமாக்கியது. பின்னர் இதற்கு வருந்தி அவர் கச்சித் திருநகரை யடைந்து இறைவனை வழிபட்டு பவழ நிறம் பெற்றுப் பவழவண்ணரானர். இஃது புராணம். 'வருகனல் வல் விடந்தாக்கி மாயவன் வெண்ணிறமேனி, கருகினனன்று தொடங் கிக் கரியனெனப் பெயர் பெற்றான்' என்பது காஞ்சிப் புராணம்.

௫. தூய்மை - காம வெகுளி மயக்கஞ் செறியாத் தூய்மை. சுவணம் - பொன்; சுவர்ணம் என்னும் வடமொழிச் சிதைவு. ஆடைகள் பீதாம்பரம் என்பது கருத்து. தொங்கல் - மலர்மாலைகள். செல்வம் மணத்தல் - செல்வம் மிகுதியும் பொருந்திக் கலத்தல். செய்யுள் தெய்வம் மணத்தல் - யாக்கும் பாட்டுக்கள் தெய்வத்தின் மேலாதல். நெய்யே மணத்தல் - எண்ணெய் கலவாமை. குண்டங் கள் தோறும் வேள்வித் தீ மல்கும் என்க. வீதி நேய மணத்தல் - வீதியிற் செல்வோர் யாரும் அன்பிற் கலத்தல். சாறு மணத்தல்- திருவிழாப்பொலி வுறுதிருத்தல்.

௬. துங்கம் - உயர்வு, மேன்மை. தோலா நா - தோல்வியுறாத நா; தோலா ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். திரண தூமாக்னி - தொல்காப்பியரது இயற்பெயர். இலக்கணமா என்றது நன்னூலாதி சிற்றிலக்கணங்களி னமையாது தொல்காப்பியத்தை இலக்கணமாக் கொண்டமைந்தது என்றபடி. சமையாதி-சமயம், விசேடம், நிருவாணம் என்னுந் தீக்கைகள். சமதமாதி குணங்கள் என்றுங் கூறுப. பாரம் - பாரவும். சின்னமுறுதல் - நீறு கண்மணி புனைதல். பாகம் - மலபரிபாகம். பக்குவர் - சத்திநிபாதத்துத்தமர். அதிகாரிகள் - அருகதையுடைய கேட்போர். அங்கம் - உடம்பு; ஆகுபெயர். துன்பம் - பிறவித்துன்பம். இன்பு - இன்பம்; சிவா நந்தம். சங்கம் - சங்குகள். அவைகள் என்பதும் பொருந்தும்.

௭. நாளும் அறிதல் - எப்போதும் அறிதல். கடி - விளக்கம், சிறப்பு. கண்காண்படி செய்து - கண்ணிற் காணும்படி செய்து.

அன்பு கண்ணாற் காணும் காட்சிப் பொருளன் றெனினும் அத னாற் புறக்கரணத்து நிகழும் செய்கைகளை யெல்லாம் செவ்வனே விளக்கிக்காட்டி அநுமானவகையால் விளங்கச் செய்தலே ஈண்டுக் கருதியது. சிவபெருமான் சேக்கிழார் பெருமானை உணரும்படி செய்தனரென்க. இப்படி யார் பெற்றார் - யார் இப்படி அரு ளப்பெற்றார். இந்த மான்மியம் தமிழினன்றி வேறு எந்தப் பாடை களின் உளதாயிற்று! தமிழுக்கு இது ஒரு பெரும்பாக்கியம். தீந் தடி-மதுரம் நிறைந்த கொம்பு, கரும்பு. தடி-வயல்.

அ. பத்திச்சுவை - அன்பிரதம். சொட்டச் சொட்ட - மிகு தியும் ஒழுக; அடுக்கு மிகுதியை உணர்த்துவதாயிற்று. வழிபடர்தல்-வழியிற் செல்லுதல். உத்தி - பாம்பின் படம், ஆகு பெயராய்ப் பாம்பை யுணர்த்திற்று. புல் உயர்த்தோன் - புலியைக் கொடியாக உயர்த்தினோன்; அநபாய சோழர் ஈண்டுக் கருதியவர். ஒல்லா - கூடாத. அருகந்தர்-சமணர். முயல் செயல்-வினைத்தொகை. வலவ-வல்லவரே; விளிவேற்றுமை. மடைச்செறி-மடையிற் செறிந்த.

கூ. ஈற்றுத்தலை - முடிவில், இறுதியில்; பாட்டின் இறுதியில் என்பது கருத்து. மவுலி - மகுடம். சொல்லணி - சொற்றொடை வகைச் சிறப்பு, சொல்லான் அமையும் அலங்காரம் ஈண்டுக் கருதி யது. சொன்மடக்கு. இதனை 'சிவம்பெருக்குந் திருவாரூர் திருவா ரூர்' எனவும், 'மறைத்திரு வாக்கூ ராக்கூர்' எனவும், 'மிக்க திரு விளக்கிட்டார் திருத்தொண்டு விளக்கிட்டார்'எனவும், 'கமழ்சாறூர் கஞ்சாறூர்' எனவும் பிறவுமாக வருவனவற்றாற் காண்க. பொரு ளணி - பொருளான் வருமலங்காரம். இவை உவமம், உருவகம் முத லாகப் பல 'வென்றடு புலியே றென்ன' எனவும், 'பொன்றிகழ் குன்று வெள்ளிப் பொருப்பின்மேற் பொலிந்ததென்ன' எனவும் பிறவுமாக வருங்கோறும் கண்டுகொள்க. எவ்விடமும்-கண்ட கண்ட இடமெல்லாம். இறைபட்டன - இறைபட்டனவாய், சிந்தி இறைந் தனவாய். வனப்பு-அழகு; இவை சுருங்கச் சொல்லல் விளங்க வைத் தல் :முதலிய பத்தாம். முதற் பொருளாதிய மூன்றும் - முதற்

பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்னும் மூன்றும்; முதற் பொருள் கருப்பொருள் தோன்றற்கும் உரிப்பொருள் நிகழ்தற்கும் காரணமாய் முன்னிற்கும் பொருள் என்பது; அது குறிஞ்சி முதலிய நிலமும், கார் முதலாகவும் மாலை முதலாகவும் முறையே வரும் பெரும்பொழுது சிறுபொழுது என்னும் பொழுதும் என இரண்டாம். கருப்பொருள் முதற்பொருளாகிய கருவினின்றும் தோன்றுவன என்பது பொருள்; இவை தெய்வம் உயர்ந்தோர் தாழ்ந்தோர் பறவை முதலாகவரும் பதினான்காம்; இனி உரிப்பொருள் முதற் பொருள் கருப்பொருள் என்னும் இரண்டினுஞ் சிறந்து திணைக் குரியதாய் நிற்பது என்பது பொருள். இவை புணர்தல் முதலியவைந்தும் அவற்றினிமித்தங்கள் ஐந்தும் எனப் பத்தாய் ஐந்திணைக்கும் முறையே வருமென்க. எய்த - பொருந்த. ஆற்றுப் புனலுமப் பொருள்கோள் முதலாக அறைவன: பொருள்கோள் வகை; இவை ஆற்று நீர், மொழிமாற்று, நிரனிறை, விற்பூட்டு, தாப்பிசை, அளைமறி பாப்பு, கொண்டு கூட்டு, அடி மறிமாற்று என எட்டாம். அடருபு - அடர்ந்து. தாறு - வாழைத்தாறு, குலை.

ம. மண்டலை வேலை - நெருங்கிய அலைகளையுடைய வேலை; மண்டுதல் - நெருங்தல், ஒன்றின்மேலொன்று நெருங்கித் தொடர்ந்து வருதல். அமுதவொழுக்கு - அமுததாரை. கொண்டலை நேர்தல் - கரு நிறத்தால் ஒத்தல். பகடு - எருமைக்கடா. விண்தலை - விண்ணுலகத்தினிடம், சுவர்க்கவுலகத்து.

சப்பாணிப் பருவம். இது ஒன்பதாவது மாதத்திற் கூறுவது. சப்பாணி கொட்டுதல் - கைகளைச் சேர்த்துக் கொட்டுதல்; பாணி - கை.

க. விழை - விரும்புதற்குரிய. அறமுதற் கல்வி - அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருள் நான்கின் வித்தை. கல்வியறியும்-இரண்டாம் வேற்றுமை. மேதை-பேரறிவு.

ஒழுக்கு - ஒழுக்கம், நடைமுறை. தழீஇ - சேர்ந்து, அடைந்து. துணி தேற்றல் - உறுதி பயப்பதெனத் துணிக் கொள்ளல். மாறு- கைம்மாறு, பதில் உதவி. வரூஉதினி - சேனை. மாற்றலர் - பகைஞர். இடங்கால முதலறிதல் - இடமறிதல், காலமறிதல் முதலிய வகையான அறிவு. கடிய மாற்றம் - கடுஞ் சொல், இன்னாச் சொல். உழையர் - நெருங்கிப் பணிசெய்வோர். உழையரும் விருப்ப மறியா தடக்குதல் - எப்போதும் நெருங்கி உடனிருந்து பழகிப் பணிசெய்வோரும் அறியாதபடி யெனவே மனனுற்றதை முகங் காட்டுதலால் முகமாறுதலி னறியாதபடியும், சொற் சோர்வி னறி யாதபடியும் இவை போன்ற பிறவற்றானறியாதபடியும் பாதுகாத் தல். காக்ஷிக் கெளிமை-துயருற்ற ஆவும் தனது கோட்டின்மணி துளக்கி யறிவிக்கத் தானறியுமாறு தன்னை எளியனுக்கிக் கோடல். உன்னி - உத்தேசித்து. இறை-அரசன், ஈண்டு சோழன். அரசர் புனையும் முடியை முடிசூட்டில் வேளாளர் எடுத்துக் கொடுக்கும் வழக்கம் கருதப்படுகிறது. இதனைக் கம்பரும் 'வெண்ணெய் நல்லூர்ச் சடையன்றன் மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான் மௌலி' என்றுரைக்க. உலகினிறைந்த புறவிருளை ஞாயிறு உதய வரையிற் றோன்றிக் கெடுத்தல் போலச் சேக்கிழார் பெருமான் குன்றையாங் குன்றுதித்து ஆன்மாக்களது உளத்து நிறைந்த அகவிருளைப் போக்கி ஞானவொளியைப் பரப்பினரென்க. இச்செய்யுளில் திருத்தொண்டர் அரசியலுட் கூறும் இறையிலக் கணங்கள் தொகுத்துக் கூறுவது காண்க.

உ. கார்க்கோலமாலோன் - காரினது கருநிறம் வாய்ந்த திரு மால். புரந்தருள்வது - காப்புக் கடவுளாக வுலகோம்புவது. முக மன் - உபசாரம்; பொய்யுரை என்றபடி. குலம் - வேளாண்குலம். எட்டியர் - மூன்றாங்குடித் தலைவராகிய வைசியர். மூவர் - மறை யோர், மன்னர், வைசியரெனு மூவர். புறமெனப் புகல்மூவர்-அநு லோமர், பிரதிலோமர், சங்கரர் எனப் பேசும் மூவகை இழிகுலத் தோர். பசி வருத்தம் போக்கல் - தமது வேளாண்டொழிலால்

தாமுண்பதன்றிப் பிறர்க்கு ஊட்டி யவர் பசி வருத்தம் தணித்தல். இது பற்றியன்றே யிவர் இறைவனது காலிற் றோன்றினரெனக் கூறிக் கால் ஏனைய தலை தோள் தொடைகளைத் தாங்கி நிற்றல்போலத் தாமும் ஏனைய மூவரையும் தமதுழவு தொழிலாற்றாங்குவரென் பது கருதப்படுவது காண்க. இமேலகரும் - உம்மை உயர்வு சிறப்பு; இமேலகர் - தேவர். தேவரும் புகலுவர் எனவே ஏனையர் புகழ்வது கூறவேண்டாவாயிற்று. தளி-ஆலயம், திருக்கோயில். பூசையொடு சிறப்பு - தின பூசையும் திருவிழாவும்; இதனை வட நூலார் நித்திய நைமித்திக மென்பர். நைமித்திகம் நித்தியத்திற் றாழ்வு தீரச் செய்வது. அளவா - அளவுபடாத. மேழி-கலப்பை. தார்க்கோல்-தாற்றுக்கோல்.

௬. மேவாத - பொருந்தாத. பாயுடுத்தல் தலைமயிர் பறித்தல் முதலியன சமணர் ஒழுக்கம். இவை வைதிக சைவ ஒழுக்கத்திற் பொருந்தாச் செயல்களாதலின் உழறல் எனக் கூறப்பட்டது. மேய சமையம் - சமண சமயம். ஆளுடைய பிள்ளையார் 'மறை வழக்க மிலாத மாபாவிகள், பறிதலைக்கையர் பாயுடுப்பார்களை, முறியவாது செயத் திருவுள்ளமே, மறியுலாங்கையின் மாமழுவாளனே' என்று கூறுவது காண்க. சமண சமயத்தைப் பாழ்ங்குழி யென்பதைச் சேக்கிழார் பெருமான் தமது புராணத்தில்'பொய் வாய்மை பெருக்கிய புன்சமயப் பொறையில் சமணீசர் புறத்துறையாம், அவ்வாழ் குழியின்கண் விழுந்தெழுமா றறியாது மயங்கி யவம் புரிவேன்' என வாகீசப் பெருந்தகையாரது திருவாக்கில் வைத்துக்கூறுமாறறிக. அதுவிட-அச்சமயத்தை விட்டொழிக்க.பிரதாபம்-பிரபலத்வம்; அரசர் தங்கள் பகை களைந்து மேம்படுதல் தம்மை யடைந்தோரைப்புரப்பது முதலிய நற்செய்கையின் எய்துவது புகழ். இவை யிரண்டும் அரசர்க்கு மேம்படுதற்கு வேண்டும் அருங் குணங்கள். பிரதாபத்தைச் செந்நிறமாகவும் கீர்த்தியை வெண்ணிறமாகவும் கூறுவது நூன்மரபு. எனவே ஆசிரியர் முன்னதை ஞாயிறாகவும் பின்னதைத் திங்களாகவும் கூறிப் போந்தார். காஞ்சிப் புராண

மும் கீர்த்திப் பிரதாபங்களை 'தனது கீர்த்தியுந் திறற்பிர தாபமுந் தரைமேல், அனல்செய் கோபமு முல்லையுமென வெங்கு மமைத் துப், புனிதமாமவை தம்மையும் பொதிந்து கொண்டென்னப், பனி விசும்பினிற் சிவந்து வெண்ணிறம் படைத்தன்றே' என்னுமிவ் விருத்தத்தால் மிக அழகுபடக் கூறுவது காணத்தக்கது. கோக னகம் - செந்தாமரை. பிரதாபமாகிய ஞாயிறு கோகனகமெல்லாம் மலர்த்தினன் என்பது. தேறுபு - தேறி. அன்னூர் - குழிவீழ்ந்த அவர். ஆவா - இரக்கம் குறிக்கவந்த இடைச்சொல். தமியம் - பற் றுக் கோடில்லாதோம். அபயம் - பயமின்மை; அடைக்கலம். அருளுங்கை - உபதேசித்தருளுங் கை. எழு புகழ் - பிறக்கும் புகழ்; வினைத்தொகை. ஆலோன் - சந்திரன். எல்லாம் குவித்தது - மலர் த்திய மனத்தாமரைகளை யெல்லாம் குவித்தது. குவித்தல் - ஈண்டு ஒருமையுறச் செய்யல்.

ச. துருமம் - சோலை. நீறு - திருநீறு. தூய - புனிதமாகிய. கண் - இடம். குறி - திருவுருவம். ஆவாகனம் - தாபனம்; குறித்த திருவுருவத்தில் மூர்த்தியை எழுந்தருளச் செய்தல். பெரும-பெரு மானே. அடியோங்களை - திருவடித் தொண்டு செயும் அடிமைக ளாகிய எங்களை. புரத்தல் - காத்தல். தாழ்பவர் - வணங்குவோர். மலநீத்தின்ப மெய்தல் - மலங்கெட்டு முத்தியின்பம் நுகர்தல். நாரா யண உபநிடதம் உரைக்குமாறு தாழ்பவர் ஆகிய இவர் வணக்கம் பெற்றருடி பெருஞ்செல்வ மெய்திக் கரும முதல் எம்மலமும் நீத்து இன்ப மெய்தக் கடைக்கணித்திடுதி என்று கூட்டிக்கொள்க. அருடி - அருளுதி. இவ்வுபநிடத தாற்பரியத்தை 'அதிசயும் பயக்கு நாராயண வுபநிடதம் யாரை, மதியினிற் குறித்தியாவர் வணங்கினு மவ்வணக்கம், துதிகெழு நினவே யென்று சொலுமுனைக் குறித்து நாயேன், விதியிற்செய்வணக்கம் வேறு மேவுமோ விமல வாழ்வே' என்னும் நாகைப்புராணச் செய்யுளானு மறிக. 'எம்மைப் புர' வென்று தேவரீரை வணங்கி யாம் எல்லாம் எளிதிற் பெறுவேம் என்பது கருத்து.

௬. எண்ணிய வெண்ணியபடிக்கு - எண்ணிய எண்ணியாங்கு. ஈனசமயம் - புன்சமயம். திண்ணியமலம் - உடன்றோன்றியதாய் எளிதினீங்காத் திட்பமுடைய மலம் செருக்கு - மயக்கம். வாதை- துன்பம். மலர்க்கணன் - பிரமன். துழாயவன் - திருமால். நண்ணிய - செய்யிய வென்னும் வாய்பாட்டது. நவிலக்கொட்டியருள் என்று கூட்டுக.

௭. வம்பு - கச்சு. உமையம்மையார் காணுவது — மருந்தின் வேகம் பொறாப் பசுங்குடருடைக் குழவியினது நோயுண் மருந்தைத் தாயுண்டாங்கு நடங் கண்டு பயனெய்தமாட்டாத ஆன்மாக்கள் பொருட்டுத் தாங் கண்டு அதனை அவர்க்கு உதவுமாறு என்று உண்மை நூல் கூறும். முனம் - சந்நிதியில். மதித்தவர் - மதித்து அவர். நறுவிரைநல்கி அலங்கல் புனைந்து நகும்பரிவட்டஞ் சாத்தியது - நடேசப் பிரானுக்கணிந்த திருநீறும் திருமாலையும் திருப் பரிவட்டமும் அளித்தது; இதனை 'உள்ளலார்புர நீறெழக்கணை யொன்றுதொட்டியர் மன்றில்வாழ், வள்ளலார்திரு மாலையுந்திரு நீறுமெய்ப்பரி வட்டமும், எள்ளலாரல ரென்றுசேவையர் காவலர்க்கிவை யினிதளித், தள்ளலார்வய ளீடுதில்லையி லனைவருங் களிகொண்டபின்' எனவருஞ் சேக்கிழார் புராணத் திருவிருத்தத்தாலறிக. அம்பு இட்டு - நீரை வைத்து: நீர் - கங்கை.

௮. உண்டல் உடுத்தல் மணம் - உண்ணும் அன்னத்தையும், உடுக்கும் ஆடையையும், மணத்திற்கு வேண்டிய பொருள்களையும். பல - இவை முதலிய பல; வீடு முதலியவாம். அடை யாதலர் - அடையும்வறிஞர். கைத்தலம் விரிக்கும் செயல் இல்லை யென்பதனையும், குவிதல் அள்ளிக் கொடுத்தலையும் குறியா நிற்கும். கண்டல் - தாழை. கலி - ஓசை. பொர - மான, ஒப்ப. காவலன் - அரசன். நாவலன் - புலவன்.

௯. படி - பூமி. பைதிரம் - நாடு. ஐந்திணை - குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என்பன. முப்பொருள் - முதல், கரு, உரிப்பொருள்கள்; இவற்றின் விளக்கம் முன்னர்க் கூறியது

காண்க. உள்ளன ஓதக் கற்பித்தல் - சேக்கிழார் பெருமானுக்கு முற்காலத்தவர் தமது வருணனையில் முப்பொருளும் முறைப்பட விரித்தோதுவர் எனினும் தெய்வங்களையும் திருத்தளிகளையும் ஓதினாரல்லர். சேவையர் காவலர் இவற்றை யழகுபடக் கூறிப் பின் போதருவோர் தம்மைப் பின்பற்றும்படி கற்பித்தருளினர் என்பது. இதன் செய்தியெல்லாம் திருத்தொண்டர் புராணத்துத் திருக்குறிப்புத் தொண்ட நாயனார் புராணத்துள் தொண்டைநாட்டு வருணனையிற் பரக்கக் காணப்படுமென்க. இவர் கவி தெய்வ மணங் கமழும் என்று சொல்லுவதற்கு இது ஒரு ஏதுவாகும். கவிகள் அன்புமயமாயிருத்தலில் ஓதுதலையும் கேட்டலையும் செய்வோருக்கு அன்பு முதிர்ந்து நெஞ்சங் கனிந்து அதனைப் புறத்தே யறிவிக்கக் கண்ணீர்வாரும்படி செய்யுந் தன்மையவாகும். இருபன்னிரு கோட்டம்-இருபத்து நான்கு கோட்டம். அவை: புழற்கோட்டம், புலியூர்க் கோட்டம், ஈக்காட்டுக் கோட்டம், மணவூர்க்கோட்டம், செங்காட்டுக் கோட்டம், பையூர்க் கோட்டம், எயிற் கோட்டம், தாமற்கோட்டம், ஊற்றுக்காட்டுக் கோட்டம், களத்தூர்க் கோட்டம், செம்பூர்க் கோட்டம், ஆமூர்க் கோட்டம், ஈதூர்க் கோட்டம், வெண்குன்றம், பலகுன்றம், இளங்காடு, காலியூர், சிறுகாரை, படுவூர், கடிகை, சந்திரிகை, குன்றபத்திரக் கோட்டம், வேங்கடம், வேலூர்க் கோட்டம் என்பனவாம். ஒரு கோட்ட மலாது - இவற்றுள் ஒரு கோட்டமலாது; அதாவது நாயனார் திருவவதரித்த குன்றத்தூரைக் கொண்ட புலியூர்க் கோட்டம். இக்கோட்டத்துள் குன்றத்தூரோடு பேறூர், மாங்காடு, பம்மல், கோட்டூர் என்பனவுமடங்கும். கோட்டமுறல் - கோணலைப் பொருந்துதல். இல்லாய் நல்லாய் - இல்லாத நல்லவரே.

௧. விரிநூலாகிய திருத்தொண்டர் புராணஞ் செய்தலினால் நூலாசிரியராகவும், திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் புராணத்துள் அவர் வைகையிலே ஏடிடும் பொருட்டுப் பாடிய 'வாழ்கவந்தணர்' என்பன வாதியாகிய திருப்பாட்டுக்களுக்கு உரை கண்டபோடி

யிருத்தலின் உரையாசிரியராகவும், பரசமயக் குழியில் வீழாமலும், வீழ்ந்தவர் ஏறுமாறும் போதித்த கிரமத்தில் போதகாசிரியராகவும், இவ்வாறு பலவிதத்தானு முதவி உண்மை ஞானம் பயப்பித்தலின் ஞானசிரியராகவும் விளங்குகின்றாரென்பது இப்பாட்டின் கருத்து. அகிலம் - உலகம்.

௰. நாகேசுரர் இனிதமர்தல் - சோழ நாட்டில் காவிரிக்குத் தென் கரையில் உகூ-வது தலமாய்த் திருவிடைமருதூருக்கு மேலே யுள்ளது; இங்கு எழுந்தருளியிருக்கும் இறைவன் சேடன் பூசித்த காரணத்தால் நாகேசுரர் எனப் பெறுவார். இவர் சேக்கிழார் பெருமானது ஆன்மார்த்த மூர்த்தி. இவ்வடையாளமாகத் தமது குன்றத்தூரிலும் திருக்கோயில் மடவளாக முதலிய வமைத்துத் திருநாகேச்சுரமெனப் பெயர் வகுத்து நாகேச்சுரப் பெருமானையும் பிரதிட்டை செய்து நிபந்த முதலியன வமைத்தார் என்பது புராணம். நூலாசிரியர் குன்றத்தூரைப் பலசிவதலங்கட்கும் ஒவ்வொரு காரணம் பற்றி ஒப்புக் கூறுவான் எடுத்துக் கொண்டு நாகேசுரர் எழுந்தருளியிருத்தலின் திருநாகேச்சுரத்திற்கும், நீலரத்தினங்களாலும், மாணிக்கங்களாலும், மரகதங்களாலும் வெண் சுதை தீற்றியும் அமைக்கப்பட்ட மாளிகைகளைக் கொண்டிருத்தலால் முறையே திருவிந்திர நீலப்பருப்பதத்திற்கும், இரத்தினகிரி யென்னும் திருவாட் போக்கிக்கும், மரகதமலையென்னும் திருவீங்கோய் மலைக்கும் திருக்கைலாயத்திற்கும் ஒப்புக் கூறினாரென்க.

முத்தப்பருவம். இது பத்தாம் மாதத்தில் நிகழ்வது. முத்தம்-வாய்முத்தம்.

க. பஞ்சாதி - காண்டம், அநுவாகம், சூக்தம் முதலியன போன்ற வேதத்தின் ஒருறுப்பு. மறை - வேதம்; இலைமறை காய் போல் அரியபெரிய விடயங்களை மறைத்து வைத்துக்கொண்டிருப்பது. மட்டேவர்: மண் - தரை, பூமி; எனவே தரைத்தேவர்,

பூசுரர் என்னும் அந்தணர். இவராதி நால்வர் - நான்கு முதல் வருணத்தவர். மற்றைஏழுவர்-அநுலோம ராதிய கலப்புச்சாதியர். நீரா-எளிதினீங்காத. இருவல்வினைத் தொடர்பு - அறம் பாவம் என்னும் அருங்கயிறு, இருவினைப்பாசம். உருப்பம் - வெம்மை. பிறந்தை - பிறப்பு. மேற்போயுங் கீழிருந்தும் உழறல் - உயர்ந்த யோனிகளிலும் தாழ்ந்த யோனிகளிலும் மாறிமாறிப் பிறத்தல். இன்பு - இன்பம். மெய்யடியார் - உண்மையடியார். தொகையார் தில்லைவாழந்தணர் முதலிய திருக்கூட்டத்தினர் ஒன்பதின்மர். தனியார் - திருநீலகண்டர் முதலிய அறுபத்துமூவர். இவ்வடியார் யாவரும் கட்டு நீங்கி வீடுபெற விருப்பஞ்சார்ந்தவர் என்பது.

௨. நன்னயம் - சொன்னயம், பொருணயம் முதலிய பலநயங்கள். பொலிபு - பொலிந்து, ஒப்புயர்வின்றி விளங்கி. இவர்ந்து - ஏறி. வளத்தரு - வேண்டிய வளங்களையெல்லாம் அளிக்கும் கற்பகம். வெள்ளென்பழத்திற்கு - உயிர்நீங்கிய வெள்ளிய என்பிற்கு. அழம்-பிணம். வெண்மை-தசைக்கழிவினுல் உண்டாவது. உயிருளியது-என்பைப்பெண்ணுக்கியது; இது பூம்பாவையின் செய்தி. வெங்கரா - கொடியமுதலை. மீட்டது - தருவித்தது. இது முதலையுண்ட பாலனை யழைத்தசெய்தி. கண்ணிற்பொலி - கண்ணினும் பாதுகாக்கும்படி பொலியும் என்க. மேலேகூறிய இலக்கணங்கள் ஒருங்குவாய்த்த செந்தமிழ். மணத்தல்-தமது கவிமுழுவதும் திருநெறித் தமிழ்வேத மணங்கமழ்வது.

௩. தோட்டி - அழகு. அறக்களைதல் - முற்றக்களைதல். முரண் - வலிமை. வெல்லும்முரண் - சொல்வளம், பொருள்வளம் பொருந்தி சுருங்கச்சொல்லல் முதலிய அழகுவாய்ந்து அமங்கலச் சொற்பொருந்தாது முற்றும் மங்கலமாயமைந்து ஏனைய நூல்கள் எவையும் தன்னை நிகர்க்குமாறின்றி வென்று மேம்படும்வன்மை. விலக்கு - தவிர்வன. விதி - விதித்துத்தழுவுவன. அருடற்காய-அருள்புரிதற்கு ஏதுவாய. கல்லும் - உம்மை அருமை காட்டுகின்றது.

௪. எண்ணி-நன்காராய்ந்து. இது செய்தால் இது ஆகும் இது ஆகாது என எண்ணிச் செய்யவேண்டுமென்பது; அடைந்தும் பய னுறுவதில்லையேல் அதனைமறத்தல் வேண்டுமென்பது; பகைவரை இப்போது சென்று பொருதால் வெற்றி நமதாகுமென்பது;மாசற்ற புகழெய்தற்காய காரியமிதுவென்பது; இதனைத்தவறாது செய்யின் நிச்சயம் பொருள் வரும் என்பது முதலிய சிறந்த மந்திரங்களைத்தம தரசராகிய சோழற்கு உரைத்தார் என்பது கருத்தாக்கொள்க. இவை யாவும் உத்தம வமைச்சர் செயலாகும்; இந்நியமங்களை யெல்லாம் திருவள்ளுவர் திருக்குறளிற் பொருட்பாலில் அமைச்சியலிற் காண்க.

௫. நிமலஞானம் - புரைதீர்ந்த சிவஞானம். வாரிதி-கடல். நீடுதல் - என்றுங்கெடாது ஒருபடித்தாய் நிகழ்வது. இதனை 'இயல் பென்றுந் திரியாதாகி' என்னும் பெரியார் வாக்கிற்காண்க. பெரு நாவலரேறு - பெருநாவலருட் சிங்கம்போன்றவர். சிந்தாமணி - நினைத்த யாவையும் தரும் ஒருதெய்வ மணி. பத்தி-அன்பு. பூரணம்-நிறைவு. இனிமேலொரு தாயர்கலம் சார் முலைப்பாலருந்தாமை-மீண்டும் பிறவாமை.

௬. நூலாறு தேர்ந்து உஞற்றல் என்பது: ஆறு-ஒழுங்கு, ஒழுக் கம் எனக்கொண்டு நூல்கள் கூறும் கிரமமறிந்து செய்தல் என்றும், ஆறென்பதை ஆறென்னும் எண்ணுகக்கொண்டு வேதாங்கங்கள் ஆறி னையும் தேர்ந்துசெய்தல் என்றும் கொள்ளக்கிடக்கின்றது; உஞற்று தல் - செய்தல். குண்டம் - ஓமக்குழி. புலவர் - தேவர். உதரம்-வயிறு. உதரகுண்டம் - உதரமாகியகுண்டம். சரு - தேவருணவு, யாகத்திற்கொடுப்பது. மேகமெல்லாம்பாய அலையெறி உததி பாய் என்க. உததி - கடல். சம்பராரி - மாரவேள்; சம்பரனை அரித்தவன். சம்பரன் - ஓர் அசுரன். காலாறு - அறுகால், வண்டு. பட்டம் - குளம். கற்பம் - கற்பகம். கருமேதி - பண்டித் தொகை. மேதி - எருமை. பாலாறு - வசிட்டரது காமதேனு

நந்திமலையிற் பொழிந்த பால் நதியாதலின் இப்பெயர்த்தாயிற்று. பாலாறு - வாய்க்கால்வழி. ஆறு - வழி.

௭. ஆரியர் - மேலோர். குழாம் - கூட்டம். பூரியர்-கீழோர். ஓதிமம் - அன்னம். மேதி - எருமை. கால்விசைத்தெழீஇ - வேக மாய் எழுந்து. வெடிவாளை - அச்சமுற்றவாளை. இலாங்கலி-தெங்கு. வாலாமை-அசுத்தம். வானீர் - ஆகாய கங்கை. தொடக்கு-தீட்டு.

௮. வேழம் - யானை. வெடிகொண்டு-துள்ளி. தாய் - தாவி. விண்ணம்: விண் - ஆகாயம்; அம் - சாரியை. காமதேனு-விரும்பி யது நல்கும் தெய்வப்பசு. பொம்மல் - பொருமல்; இது பாலின் சுரப்பினுயது. புழை-துளை. குடிஞை-ஆறு; ஈண்டு பாலாறு. முன்பு தான் செய்தது - நந்திமலையில் முன்புதான் பொழிந்தபால் ஓடிப் பாலாறு எனப்பெயர்பெறச்செய்தது. புதுக்குதல் - புதுப்பித்தல். பக்கு - பகுத்து.

௯. பிணர் - சருச்சரை; இது எண்வகையூறினொன்று, ஒப்புர வின்மை. எண்வகையூறு வெம்மை, தண்மை, மென்மை, வன்மை, திண்மை, நொய்மை, சீர்மை, சருச்சரை. இவையே தொடப்படும் பொருட்குளவாய எண்குணம். வாய்விட - வழிவிட, திறக்க. புகூஉ - புகுந்து, நுழைந்து. வழிதரா - வழிந்து. சாறு - கருப் பஞ்சாறு. படப்பை - சோலை. அரம்பையந்துடவை - அழகிய வாழைத்தோட்டம். ஆழி-கடல், ஆழமுடையது, உலகினை வட்ட மாகச்சூழ்வது என்றுமாம். திடர் - மேடு. உவரும் மாற்றி - உப்புத் தன்மையையும் ஒழித்து; உம்மை இறந்தது தழீஇயது. தமிழ் - இனிமை. தேக்க - பெருக. மென்பால் - மருதம்.

௰. நீளை - நீளா தேவி; இவர் விட்டுணுவின் மனைவியருள் ஒருவர். விடபம் - கொம்பு. தேத்தடை - தேன்அடை. ஏழாழி - எழுவகைக்கடல்; அவை உவர் நீர், நன்னீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன் என்பன. நுண்ணறிவினாராயின்-நுண்ணிய அறிவுகொடு ஆராய்ந்தால். கந்தி - கமுகு.

வாரானைப்பருவம். இது பன்னிரண்டா மாதத்திற்கிளைத்து வது. வாரானை - வருகை. ஆனை - தொழிற்பெயர் விகுதி.

க. மண்டலம் மதிக்கும் - நிலவுலகத்தையே விலையாகவுடைய. யாத்த - பதித்த. உச்சிப்பூ - உச்சியின் முடிக்கப்படும் பூப்போன்ற ஓரணி. பட்டம், சுட்டி, வாகுவலயம், மதாணி - இவை முறையே நெற்றி, மேனெற்றி, தோள், மார்பு இவற்றினணியும் அணிகள். குறுமுறுவல் - புன்னகை. சரோருகம் - தாமரை. சதங்கை, தண்டை, ஞெகிழி-இவை காலணிகள்; ஞெகிழி - சிலம்பு; இரட்டுதல்-சத்தித்தல். கொண்டல் அமர் - கைம்மாறு கருதாத மேகமும் விரும்பும். அமர்தல் - விரும்பல். சடாடவி - சடைக்காடு; வடமொழி.

உ. நிலவு விரிமதி - நிலாக்காலும் சந்திரன். ஒண்பனி-ஒட்பமாகிய பனி. உவவா எனினும் - இவைகளை விரும்புதல் இல்லையெனினும். உருகுவார்மதி - உருகுதலைச்செய்வாரது அறிவு. கட்பனி - கண்பெய்யும்பனி, கண்ணீர். உவத்தல் செய்ய - விரும்ப. செம்மை - சிவப்பு, செவ்விதாய நேர்மை. இணங்க - பொருந்த. எவர் கடையின் - எத்தகையரிடத்தும். அவை - அச்செம்மையும் மணமும். அளி-வண்டுகள். மலர் இரண்டு-துணைத்தாள். பெயராமை-நீங்காமை. அறுசமயம் - ஈண்டுப்புறப்புறமும் புறமுமாய சமயங்கள். உட்கு - நாணம், அச்சமுமாம். எங்கட்கு உவகைவா அறுசமயருக்கு உட்குவரப் பெயர்த்து வருக என்று கூட்டிக்கொள்க.

ங. நீடும் இன்பு - பேரின்பம், முத்தி. அரிவையர்-பெண்கள். புணர்ச்சி - கூட்டுறவு, புணர்தல். ஐந்துநிகழ் கந்தம் - ஐந்தாக வருகின்ற கந்தம், பஞ்சகந்தம். கெடுதல்-அவிதல். அவை. க. பிருதிவி, அப்பு, தேயு, வாயு, கடினம், கந்தம், இரதம், வன்னம் என்னும் எட்டினுகும் உருவக்கந்தம். உ. குசலா வேதனையாகிய சுகவறிவு, அகுசலா வேதனையாகிய துக்கவறிவு, குசலாகுசல வேதனையாகிய சுகதுக்கவறிவு என்னும்மூன்ருகும் வேதனைக்கந்தம். ங. சுரோத்

ரம், துவக்கு, சக்ஷு, சிங்ஙுவை, ஆக்கிராணம், மனம் எனும் ஆறு ஞகும் குறிப்புக்கந்தம். ௪. பத்துவகைப் புண்ணியம், பத்துவகைப் பாவம் என்னும் இவ்விருபதாஞகும் பாவனைக்கந்தம். ௫. சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம், உத்தி என்னும் ஆறுஞகும் விஞ்ஞானக்கந்தம் என்பனவாம். குணமூன்று - மூன்றுவகையான குணத் தொகுதிகள்; அவை: க. ஞாஞவர்ணியம், தரிசஞவர்ணியம், வேதநீயம், மோகநீயம், ஆயுசு, நாமம், கோத்திரம், அந்தராயம் என்னும் எட்டின்தொகுதி. உ. பசித்தல், தாகம், பயம், செற்றம், உவகை, மோகம், சிந்தனை, பழித்தல், நோய், நசித்தல், வேர்வை, கேதம், மதம், வேண்டல், அதிசயித்தல், ருசி, பிறப்பு, உறக்கம் என்னும் பதினெட்டின்தொகுதி. ௩. அரசிகம், ரதி, அரதி, சோகம், சுகிச்சை, பயம் என்னும் ஆறின்தொகுதி. இருவினை-நல்வினை தீவினை என்னும் இவை. கேடு-கெடுதல். மலம்-ஆணவமலம். விக்கிரநித்தம்-சரீரமழியாமை; சரீரம்-ஈண்டு சுத்தமாயா சரீரம் என்க. உயிர்-ஆன்மா. பகுதி-பிரகிருதி; இது சிதைவுமொழி. சித்தி-சித்தித்தல், பெறுகை. இது பசுகரணங்கெட்டுச் சிவகரணமாவதென்றும், அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்வம், வசித்வம் என்னும் எட்டுச்சித்திகள் என்றும் உரைப்பர். வாதம் படர்ந்து - வாதம் பேசி, வாதித்து. வருதிறன் அற - வருந்தன்மை கெடுதலால். வளங்கூடுதல் - உண்மை முத்திகூடுதல். இது ஈண்டு சுத்தாத்வைத சைவசித்தாந்தம் பேசும் சிவசாயுச்சியப் பேறு. கூடு செந்தமிழ்-கூடிய செந்தமிழ்; திருநெறித் தமிழ் வேதத் திருமுறைகள். இச் செய்யுளில் அரிவையர் புணர்ப்பு இன்பம்,என்பார் உலகாயதரும், ஐந்து கந்தங்கெடுதல் இன்பம் என்பார் பொதுவகையான் பௌத்தரும் சிறப்புவகையான் அவருட்சௌத்ராந்திகரும், குணமூன்றும் ஒழிதல் இன்பம் என்பார் சமணருள் நிகண்டவாதியரும், இருவினைக்கேடு இன்பம் என்பார் பிரபாகரரும், மலநாசம் இன்பம் என்பார் பேதவாதிகளும், விக்கிரக நித்தம் இன்பம் என்பார் சிவசமவாதிகளும், ஞானமே இன்பம் என்பார் மாயாவாதி

களும், உயிர்கெடுதல் இன்பம் என்பார் பாற்கரியரும், பகுதிமேற் கெடுதல் இன்பம் என்பார் பாடாண வாதிகளும், சித்தி இன்பம் என்பார் சங்கிராந்த வாதிகளும் ஆவார் என்று அறிக. இவரது கொள்கைகளையும் இவையொழிந்த ஒழிந்தமதவாதிகளின் கொள்கைகளின் மதங்களையும் சிவஞான மாபாடியத்து மாதவச் சிவஞான யோகிகள் அவையடக்க வெண்பாவுரையிற் கூறுமாறு கொண்டு கண்டு கொள்க. ஈண்டு விரிப்பிற் பெருகும். அன்றியும் ஆசிரியர் ஈண்டு தொகுத்துக் கூறியதொகுப்பு உமாபதி சிவாசாரிய சுவாமிகளருளிய

"அரிவையரின் புறுமுத்தி கந்த மைந்து
மறுமுத்தி திரிகுணமு மடங்கு முத்தி
விரிவுவினை கெடுமுத்தி மலம்போ முத்தி
விக்கிரக நித்தமுத்தி விவேக முத்தி
பாவுமுயிர் கெடுமுத்தி சித்தி முத்தி
பாடாண முத்தியிவை பழிசேர் முத்தி
திரிமலமு மகலவுயி ரருள்சேர் முத்தி
திகழ்முத்தி யிதுமுத்தித் திறத்த தாமே"

என்னும் சிவப்பிரகாசத் திருப்பாட்டிற் கூறியருளிய தென்றுணர்ந்து கொள்க.

௬. செற்ற - நெருங்கிய. கன்னல் - கரும்பு. தாளம் - முத்து. கந்தி-கமுகு. மருப்புக் கடாக்களிறு-மருப்பினையுடைய கடாவாகிய களிறு. களிறு மறையப்போய - களிறும் மறைய ஓங்கி வளர்ந்த. செஞ்சாலி-செந்நெல். கதலி-வாழை. பாலி வீசும் என்று கூட்டுக. சுடர்மணிகள் - எரிசுடர் மாணிக்கங்கள். முத்துண்டாகும் இடங்களை 'பனிமதி கதலிமேகம் பைந்தொடிக் கழுத்தா வின்பல், தனியானை யேனக் கொம்பு தடங்கரா வுடும்பு கொக்கு, வினையராச் சலஞ்ச லந்நந் திப்பிமீன் மூங்கில்பூகம், நினைசெந்நெல் கரும்பு கஞ்ச நிகழிரு பதின்முத்தாகும்' என்னும் செய்யுளிற் காண்க. நடவுவோர் - நாற்று நடுகின்றவர்கள். வாருபு - வாரி. எற்றி - திருவடி

களின் எற்றியென்பது; இச்செய்தி நாயனாருக்கு இச்சிறு பருவத்திற்றானே உற்ற உவர்ப்பினைச் சூசிப்பிக்கின்றதாகும்.

௫. ஏது - காரணம். ஏதுவாம் மலம் - மூலமாகிய ஆணவம்; இது ஸகஜம், உடனுண்டாயது என்பது. தன் சத்தி - ஆணவத்தின் வலி. திருவருள் - சிவசத்தி. பதிய வருதல் - நிபாதமாதல்; சத்திநிபாதமென்பது கருத்து. தாள் ஆயாத என்க. எம்-எமது. மனமும்-உம்மை யிழிவுசிறப்பு. அகலாத - நீங்காத. தாள்-தாளைச் சேர்ந்த. அடியார், அவிர் புதல்வர், தோழர், தாங்கள் இவை நான்கனோடும் மார்க்கதகைக் கூட்டித் தாசமார்க்கம், சத்புத்ரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்று இயைத்துக் கொள்க. பொலிய-விளங்க. அராவுரி நிகர்த்த தூசு - மெல்லிய ஆடை. காவீத்தமலர்-காம்பரிந்த பூ. கருங்கொண்டல் போல்வானும் - கரியமேகத்தை நிறத்தால் ஒப்பவராகிய திருமாலும். மிகையெனா-வேண்டுவதில்லையென்று சொல்லும்படி. கூய் - அழைத்து. ஆதரிக்கும் - புரக்கும். தழுவிய - பொருந்திய.

௬. பழையனூர்-இது திருவாலங் காட்டுக்கு அருகிலுள்ளது; திருவாலங்காட்டுத் தேவாரத்திலெல்லாம் சொல்லப்பட்டிருப்பது. இதனை 'கொன்றாடுங் கூற்றை யுதைத்தார் தாமே கோலப்பழனை யுடையார் தாமே, சென்றாடுந் தீர்த்தங்க ளானார் தாமே திருவாலங் காடுறையுஞ் செல்வர் தாமே' என்னும் திருத்தாண்டகத்திற் காண்க. அவை-வேளாளர் சபை. நீ ஒருதி-நீ அறிவை. எழுநா-அக்கினி. எழுநாக்குழி தீக்குழி. வடவாரணியம் - ஆலங்காடு, திருவாலங்காடு. ஆடொருவர் - இரத்தினசபாபதி. எழுபதின்மர்-வேளாளர் எழுபதின்மர். இங்குக் கருதப்பட்ட கதையாவது:—வேற்றுமகளிர் போகந்துய்ப்பான் ஒருவன் அதனைப் பொறாது கண்டித்த தன் மனைவியை யிடையூறெனக் கருதி விழாவிற்கென வழைத்துச் சென்று ஒரு காட்டகத்துக் கொன்றொழித்தான். கொலைப்பட்ட பெண் பேயாகிக் கொன்றவனைக் கொல்வான் காத்திருந்தது.கொன்

றவன் வணிகனுகப் பிறந்து சோதிடரால் வடக்கே செல்லின் அப் பேயால் இறக்க நேருவதை யறிந்து அதனை யச்சுறுத்தும் மந்திர வாள் ஒன்று வைத்துக் கொண்டு சென்று வருவானுயினன். ஒரு நாள் இவன் வாணிபத்தின் பொருட்டுப் பழையனூர் மருங்கு செல் லும்போது அப்பேய் கையின் ஒரு மகவேந்திப் பெண்ணுருவங் கொடு இவனைத் தொடர்ந்து சென்றது. தொடர்ந்த பேய் அவலூர் வேளாளரிடத்துச் சென்று வணிகன் தன் கணவனெனவும், குழந் தை யவன் மகவெனவும், அவன் தம்மை அநீதியாகத் துறந்து செல் கின்றுனென்றும், அவனைத் தன்னோடு அங்குள்ள மண்டபத்தின் அன்றிரவு தங்குமாறு செய்யவும் வேண்டியது. வேளாளர் வணி கனை அவ்வாறு செய்யுமாறு சொற்றதைக் கேட்ட வணிகன் 'ஐயன் மீர், இவள் ஓர் பேய், என்னைக் கொல்வான் கருதியிவ்வாறு செய் கின்றது' என்றுன். பேய் பலவாறு கெஞ்சி யவர் இரங்குமாறு செய்ய அவர் 'வணிகரே, உம்முருயிர்க்கு எங்களெழுபதுயிர் யீடாக' என வற்புறுத்தியதனுல் தன் வாட்டுணையைக் கருதி வணிகன் ஒருப்பட்டான். பேய் மீண்டும் அவரை வேண்டி அவன் கைவாளை யும் ஒழிக்கும்படி செய்தது. அம்மண்டபத்து அன்றிரவு அவ்வணி கன் பேயினுற் கிழிபட்டிறந்தான். அதனை யறிந்த வேளாளர் சொற்றவருது தீக்குழியிற் பாய்ந்திறந்தனர் என்பது. இதனைத் திருத்தொண்டர் புராணத்துத் திருக்குறிப்புத் தொண்ட நாயனுர் புராணத்து

> 'நற்றி றம்புரி பழையனூர்ச் சிறுத்தொண்டர் நலைவந்
> துற்ற போதுதம் முயிரையும் வணிகனுக் கொருகாற்
> சொற்ற மெய்ம்மையுந் தூக்கியச் சொல்லையே காக்கப்
> பெற்ற மேன்மையி னிகழ்ந்தது பெருந்தொண்டை நாடு''

எனவரும் திருப்பாட்டானும், 'நீலி தனக்கஞ்சி நின்றவணி கேசர்க் காக், கோலி யபயங் கொடுக்குங்கை' எனவரும் கம்பர் திருக்கை வழக்கத்தானும் அறிக.

எ. அளவும் - அளாவியுயரும். வரை நாடு - மலைநாடாகிய சோழ நாடு. விண்ட கலகத்திறம் - கலகம் ஒழிந்த செய்தி; இது வட நூன் முடிபு. மடக்கொடி - பெண் சரண் - அடைக்கலம். கேண்மை - கேளிராந்தன்மை. அருள் பெய் - அருளைப் பொழிகின்ற. இங்கு குறித்த வரலாறு:—சேரநாடாய மலைநாட்டிற் கலா முண்டானபோது வணிகர் பலரும் நாடகன்று பலபக்கம் போயிருந்தனர். அவரைச் சேர்ந்த ஒரு சிறுமி தவறித் தொண்டை நாட்டில் ஓர் வேளாளனைச் சரண் புகுந்தாள். அவனும் அவளைத் தங்கையெனத் தகவிற் புரந்துவந்தான். கலகமொழிந்து நாடாயினபோது வணிகர் திரும்பிப் போந்து தம்முள் இச்சிறுமி காணுதயர்ந்து தேடியிருப்பிடமறிந்து புக்கனர். அந்நாள் அவளும் வயது நிரம்பி மங்கையாயுற்றமை கண்டு கற்புநிலையை யையுற்று அவன் ற வன்னுரை வேளாளன் உறுதிச் சொல்லினுற் றேற்றி யவளைத் தன் தங்கையாக் கொண்டமை தெரித்து மகிழ்வித்தான். அவனே பிறகு அவளை ஓர் வணிகனுக்கு மணப்பித்து மைத்துனக்கேண்மை கொண்டு வரிசை செய்து மகிழ் சிறந்தான் என்பதாம். இதனையும் திருக் குறிப்புத் தொண்ட நாயனர் புராணத்து

'ஆனை யாமென நீறுகண் டடிச்சேர னென்னுஞ்
சேனு லாவுசீர்ச் சோழுர் திருமலை நாட்டு
வாணி லாவுபூண் வயவர்கண் மைத்துனக் கேண்மை
பேண நீடிய முறையது பெருந்தொண்டை நாடு'

என்னும் திருப்பாட்டானும், தொண்டை மண்டல சதகத்து

கொத்தலர் கோதை வியன்சேர மண்டலக் கொம்பைத்தன்பால்
வைத்திருந் தாங்கவ டன்கேளிர் நேடிவா வவர்க்கே
யுய்த்திரு வோர்க்கும் வரிசையு மாற்றி யுடனுஞ் சென்று
மைத்துனக் கேண்மை படைத்த தன்றேதொண்டை மண்டலமே'

எனவரும் பாட்டானும் அறிக.

அ. வில் - ஒளி, ஞான ஒளி. விபூதி-பெரிய செல்வப் பொரு ட்டு. கோடை - வெப்பம். வாரிதி - கடல். தப - கெட்டொழிய. கறுத்து கருநிறங் கொண்டு, கோபித்தென இரு பொருளுங் கொள்க. கற்றங் கமைதல் - கற்று அதற்குத் தகநிற்றல். ஆரமுழ க்கு - ஹரவொலியினை அடியார் யாண்டும் மிகுதியும் செய்யுமா செய்து என்பது கொள்க. காமர் - அழகு. கொற்றம் - வெற்றி. இப்பாட்டு சேக்கிழார் பெருமானைத் திருத்தொண்டர் புராண மழை பொழிந்த மேகமாகக் கொண்டு அதற் கேற்ப மழைச் செய்திகளை யெல்லாம் உருவகித்துச் சொல்லும் அழகு பாராட்டற் பாலது.

கூ. மலராதனத்தான் - பிரமன். சுதரிசனத்தான் - திருமால்; சுதரிசனம் - சக்கரம். கதை - தண்டு. பலாசக்கோல் - முண் முருக் கங்கோல்; இது முதலாச்சிரமத்தவருக்கு விதித்தது. நான்காம் ஆச்சிரமத்தர் - சந்நியாசிகள். முந்தூழ் - மூங்கில். தேற்றும்-அளந் தறியும். துலாக்கோல் - தராசுக்கோல். மோலி - தலையணி, கிரீ டம். செங்கோல் - செம்மை கோடாமை. வேளாளர் தாற்றுக் கோலைத் தமது கையிற் பற்றுவதனுல் மேலே கூறியாரெல்லாம் தங்கடங்கள் செயல் செய்யும் வன்மையராகின்றூர் என்பது ஈண் டுக் கருதுவதென்க.

ய. ஏறு-சிங்கேறு, கோளரி. கோற்றேன்- கொம்புத்தேன்; கோற்றேன் பாராட்டப்படுதலை 'கோற்றேனெனக் கென்கோ குரை கடல்வாயமு தென்கோ' எனவருந் திருவாசகத்தானுமறிக. அருகந்தர் - சமணர். சிந்தாமணியைப் பொருட்படுத்தாச் சிந்தா மணியென்னு மழகு காண்க. உள்ளுமவர் - நினைப்போர். எய்ப் பிடை வைப்பு - தளர்ந்த காலத்துக் கிடைக்கும் சேமநிதி; எய்ப்பு- இளைப்பு. வைப்பு-ஆகு பெயர். உலாவாது-கெடாது. போகம் என் னும் சொல் சிவபோகமெனவும், நெற்போகமெனவும் ஈரிடத்தும் வழக்காறுண்மை தெளிக. இதுபற்றி யன்றே வாதவூர்ப் பெருந்த கையாரும் 'தொண்டவுழவாரத்தந்த அண்டத் தரும்பெரு மேகன் வாழ்க' என்பதில் தொண்டரை உழவரெனக் கூறியருளினரென்க.

அம்புலிப் பருவம். இது பதினாறாம் மாதத்தினிகழ்வது; 'சந்திரனை யழைப்பது. அம்புலி - சந்திரன். பதினெட்டாம் மாதம் என்னலும் உண்டு.

க. பாடு - பெருமை. மதியோன் - சந்திரன்; பெருமை. இறைவன் திருமுடியில் வீற்றிருத்தல், அமுதமயனாதல் முதலிய. சேவையர் காவலர் தெய்வீகக் கவிபாடும் பேரறிவுடையராதல். மதி - அறிவு. விண்டு - திறந்து. பதினாயிரம் - அநேகம்; அளவின்மைப்பொருள். சுரும்பர் - ஆண்வண்டு; போலிச்சொல். இன்னறவு - இனியதேன். கழுநீர் - ஆம்பல். மாலை - வரிசை, பூமாலை. சந்திரனைக்கண்டு கழுநீர் மலர்கின்றன. சேக்கிழார் பெருமானது மரபுக்குரிய மாலை கழுநீர்; நீடுசுடர்படுசம்பு: நீடு - அளவிலாத; சுடர் - ஞானவொளி; சம்பு - இன்புருவினன்; அலகில் சோதியனாய இன்புருவ இறைவன். சடைக்கண்ணிருத்தல் சந்திரனுக்கும், அடைந்து கூடியது அருண்மொழித் தேவருக்கும் கொள்க. கலை - சந்திரன் பதினாறு கலையுடையோன்; தொண்டர்புராண முடையார் நிரம்பிய நூற்கலைகளை யுடையோர். நெடியவம்பரவை - சந்திரன் பெரிய அழகிய கடலிற்றோன்றுதல். தொண்டர்சீர் பரவுவார் பெரிய வீணர்களுடைய அவை அலறச்செய்தல்; அம்பரவை எனவும் வம்பர் அவை எனவும் பிரித்துப்பொருள்கொள்க. சாந்தம் - குளிர்ச்சி; சந்திரனுக்கும் உபசாந்தம், உத்தமசோழபல்லவருக்கும் கொள்க. சேக்கிழானாதல் - பாட்டுடையார் சேக்கிழார் கோத்திரத்துக்குரியராதலும் மதி இடபராசிக் குரிமையுடையனாதலுங் கொள்ளப்படும். சந்திரன் இடபராசியில் உச்சமுடையோன் என்பது சோதிடநூலிற் கண்டது. உரோகணியினிடத்து அதி காமமுடையோனா யிருந்தானென்பதும் இதுவே. ஏர்வளம் - மதிக்கு அமுதவளமும், குன்றைக்குலாதிபருக்கு ஏர் (உழவு ஏர்) வளப்பமும் கொண்டுபொருத்துக. மானுதல் - ஒத்தல். மேற்போய் ஆடும் கொடி என்க. அருளுருத்தேசு - அருட்டிருமேனி யுடையராய் ஞானஒளியுடைமை.

உ. அம்போருகம்-தாமரை; சந்திரனைக்கண்டு தாமரைகள்குவி கின்றன; சேக்கிழார் பெருந்தகையைக்கண்டு எத்தகையோர்களும் தங்கள் மலர்போன்ற கரங்குவிக்கின்றனர். கரம்-கதிர், கை என்று கொள்க. விராம் - பொருந்தும். மனை - மனைவியர், வீடு. சாலி- அருந்ததி, நெல். சந்திரன் தனது மனைவியராகிய அச்சுவினி முதலியவையோடு பொருந்தியிராமல் எப்போதும் அருந்ததியுடு வோடு பொலிந்திருக்கின்றான் என்பதும் குன்றையாளி வீட்டில் அடங்காப் பெரிய நெற்குவைகளைப் பொருந்தியிருக்கின்றார் என் பதும் கருதப்பட்டன. அறவர் - சந்திரனுக்கு அத்திரி முனிவராய பிதா. சேக்கிழார் பெருந்தகை சிவபெருமான் கண்மணியாற் பொலிதலும் கண்போற் பொலிதலும் உடையார். சந்திரன் இறை வன் சடையிற் கங்கையின் சம்பந்தம் உடையன். 'சந்திரனை மா கங்கை திரையான் மோத' என்பது தமிழ்மறை. சேக்கிழார் கங்கை குலாதிபர். வரநதி - சிறந்தநதி, கங்கை. பந்தம்-சம்பந்தம். நந்தமர்கரப் பண்ணவன் - சங்கேந்திய திருமால். நந்து - சங்கு. மிகையென்ன - வேண்டாமென்ன. சந்திரன் தனது கிரணங்க ளாற் பல்லுயிரையும் வளர்க்கின்றான். ஒப்புயர்வில்லாத அமைச் சராய் உலகம்புரந்தமை சேக்கிழார்பாற் கொள்ளப்படும். விட்டுணு காப்புக் கடவுளாதலின் இங்ஙனங் கூறியது. நிகராதிராய் - நிகர்ப் பாய். இவை யிரண்டுபாட்டானும் சாமோபாயம் கொண்டு கூறும் முறையினைக் காண்க.

௩. இரவோன் - யாசிப்போன்; இரவு - யாசகம். இராத்திரிக் குடையோன் என்பது இயற்கைப்பொருள். மகாப்பிரபு - பெரிய பிரபு; உலகங்காக்கும் ஒப்புயர்வற்ற மன்னர் பெருமான் கவரி வீசலும், யானையெருத்தம் பொலிதலும், 'உலகுக்கெல்லாந் திரு வுடையந்தணர்' மூவாயிரவர் வேதமோதிப் பின்போதலும், இறை வன் கொடுத்த முதலுடையராதலும், மடபதிகள், பாவலர், நாவல ராதியோர் கைகூப்பி யேவல்கேட்டலும் பிறவும் பெரிய பிரபுவா தற்குரிய பொருத்தங்களென்க. சந்திரன் கள்வனை யுகத்தல் -

கடகராசியை உரிய வீடாகப்பொருந்தல்; களவன் -சாதியொருமை, நிகழ்ச்சியென்றும் இகழ்ச்சியென்றும் பிரித்துக்கொள்க. உரவோன் - ஞானவான்; அறிவுவன்மை யென்பதாற்போந்தது. நீ அல்லோன் (இராத்திரிக்குடையவன்) ஞானியல்லே. வானவன் - தேவன்; மேலோன். உனக்குத்தானவப்பேர் - உனக்கு ராக்ஷதப் பேர். (தானவன் - சந்திரன்). பரவோன் - மேலோன்; பரவப் பெறுவோன். பாதிகொண்டான் - பிறையாக அணிந்தான். முழுமையுங்கொள்ளுதல் - பேரருள்புரிந்து ஆண்டமை. மணிப்பணி - இரத்தினுபரணம். அரவோன் - சர்ப்பத்தை உடையவன்.

௪. சாறு - திருவிழா. சால் - சான்ற, மிக்க. தாண்டவம் - திருக்கூத்து. பரமசற்குரவன் - பரமனுகிய ஞானசாரியன்; பரம - மேலான என்றுங்கொள்க; இறைவனே எவ்வெச் சந்தானத்திற்கும் ஒப்புயர்வற்ற ஆதிகுரவனுயமைதற் பெற்றியெல்லாம் சிவதத்துவ விவேக நூலுடையார் கூறுவதுகொண்டு காண்க. அநுக்கிரகம் - அருளிப்பாடு. வானோர் பேணுகுரவன் - தேவகுருவாகிய பிருகற்பதி. நிக்கிரகம் - முனிந்து தள்ளப்படுதல். பேதை-அறிவிலி. வீறு - உயர்வெய்திய. பொன்னேடிரும்பொப்பது, ஒன்று செம்பொன் செந்தாது என்றும் மற்றொன்று கரும்பொன் கருந்தாது என்றும் சொல்லப்படுதலால். பெயரளவாகச் சிறிது ஒப்புமை உண்டெனினும் பொருளளவாகச் சிறிதும் ஒவ்வாமை ஈண்டுக் கருதப்பெறுவது. சந்திரனே எவ்வாற்றானும் எது நிகரொன்றில்லா நின்னையழைத்தது கருணையே யென்பதாம். அழைத்தலிது - அழைத்த அது; அழைத்தது.

௫. செம்மை மதியோன் - செம்பொருள் காணும் அறிவுடையேன்; செம்மை சிவப்பென்றுகொண்டு உவமைகாண்க. வெண்மை மதியோன் -வெள்ளியசந்திரன்; வெள்ளறிவுடையோன். தண்மையுடையரோடு உறவுகோடல் - பிறவிக்கோடை நீங்கி இறைவன் திருவடி நீழலடைந்த மெய்யன்பரையடைதல்; செம்மலர் ்நோன்றாள் சேரலொட்டா வம்மலங்கழீஇய அன்பரோடு மரு

வுதல். வெம்மையுடையவர்களோடு மதிதொறும் மதிதொறும் விரா யுறவுகொள்ளல் - மாதந்தோறும் பன்னிரண்டு ராசிகளையும் சுற்றிப் பொருந்துதலால் பற்பலவிராசிகளினிற்கும் தீயோரும் பாபிகளு மாகிய வெய்யோன், செவ்வாய், சனி, ராகு, கேதுக்களோடு சென்று கூடுதல். ஒருதன்மை - ஒருநீர்மை, நிலையுடைமை. சந்தி ரன் ஒருபக்கத்தில் வளர்தலும் ஒருபக்கத்தில் தேய்தலும் இவையு மின்றி யொருநாள் அடியோடு கெட்டொழிதலும் உடையனுதலை மூன்றுலகும் அறியுமென்பது. ஒருநாள் - அமை. இவை - இச் செயல். இவ்வளவு அற்பனுகிய உன்னையழைத்தது முழுக்கருணை யென்றபடி. அம்மை - அ மை யென்றுகொள்ள அந்த மேகம் எனப் பொருள் போதலால் மேகம்போன்ற கொடையாளர் என்க. அ - பண்டறிசுட்டு. அம்மேகம் என்று கொண்டு நீருடைய மேகம் என்னலும் பொருந்தும். அம்மை - உலகமாதாவாகிய உமையம்மையார்போன்ற கற்பு முதலிய அரும்பெருங் குணம் வாயந்தவா நிறைந்தவென்றும், அம்மை - தாயொத்த அன்புடையார் நிறைந்தவென்றும் பொருந்துமாறெல்லாம் கொள்க.

௬. குறை - உடற்குறை; ராகுகேதுக்கள் மாறுவேடம் பூண்டு தேவர்களோடு அமுதுண்ட ஞான்று விட்டுணுமூர்த்தியால் சட்டு வத்தால் வெட்டுண்ட குறைஉடலையுடையர் என்பது கருதத்தக்கது. பாம்பு-ராகு. உண்டுமிழ்ந்திடல் - கிருகணம்பற்றிவிடுதல். ஆட்சி - ஆளுதல். குரு - நிறம். துத்தி - படப்பொறி. பணுடவி - பணம் அடவி என்று பிரிக்க; வடமொழி. பணம் - பாம்பின் படம். தலைதோறுந் தனித்தனிப் படமுடையனுய் ஆயிரந் தலையுடையன் சேடனுதலின் பணுடவி என்றதென்க. பாம்பு- ஈண்டு ஆதிசேடன்; இவனைக் கலையொருங்கு வல்ல பேரறிவனுக் கருதுப. இத்துணைப் பெரும்பாம்பு (பேரறிவன்) எங்களையனைச் சபையிற் சந்திக்க நாணுவன்; உன்னை உடற்குறையுடைய ஒரு சிறுபாம்பு வாயிலிட்டு விழுங்கும் என்பது கருதியது. நேர்-எதிர், முன். நினை ஈன்றது ஒருபாலை - பாற்கடலிற் சந்திரன் தோன்

றினன் என்பது புராணம். இலகுவே -இலேசாக. ஏகாரம் - தேற்றப்பொருட்டு. நென்னுனை - நெல்லின் நுனி. தனை - அளவு. முறையின் - கிரமமாக. தூக்கு-பாட்டு. சிறு தூக்கு -இலேசாகத் தூக்குதல் எனப்பொருடந்து எமது பெருமான் எழுபரவையும் (எழுகடலையும்) சிறிதளவும் முயற்சியின்று எடுத்து நிறுத்தான் எனவரும் நயம் காண்க. இப்பொருளில் தூக்கினைத் தராசு என்க. மேலேகூறியதிருப்பாட்டு நடுத்தாட்கோண்ட புராணத்துள்ளது. அது "பேர்பரவை பெண்மையினிற் பெரும்பரவை விரும்பல்குலார்பரவை யணிதிகழு மணிமுறுவ லரும்பரவை, சீர்பரவை யாயினா டிருவுருவின் மென்சாய, லேர்பரவை யிடைப்பட்ட வென்னுசை யெழுபரவை' எனவருவது. தம்பிரான் - தலைவன். வானயாறு - ஆகாயகங்கை. திடர் - மேடு.

எ. தமிழ்ச்சங்கம் -மதுரைத் தமிழ்ச்சங்கம். முதன்மையோன்- இறையனார் என்று வழங்கும் தனிமுதல் வானவனாகிய இறைவன். அன்பினைந்திணையென நவின்றது, 'அன்பி னைந்திணைக் களவெனப் படுவ, தந்தண ரருமறை மன்ற லெட்டினுட், கந்தருவ வழக்க மென்மனார் புலவர்' என்னும் சூத்திரம். இதை நவின்றநூல் - இறையனாரகப்பொருள். விதிப்படி நல்லார் வணங்குதோறும் என்க.கருமை செம்மை வெண்மையெனவரும் அழகுகாண்க. எருவிடுதல் - சிறு பெண்கள் தங்கட்கு விரைவில் மணங்கூடுமாறு நிலாச்சோறு சமைத்துச் சந்திரனுக்குப் படைக்கும்தோறும் எருப்பிட்டு இட்டு வணங்கும் வழக்கம் கருதியது: மொய்ம்பு-பலம், வன்மை. உழவு தொழிலில் எருவிடுதல் சேக்கிழார் பெருமானுக்குக் கொள்க. தொழின் முயல் - தொழின் முயற்சி. சந்திரன் தன்னிடத்து முயல் காட்டுதல்போல் இவரும் முயல் காட்டுவார் எனவரும் நயம் ஓர்க. மறிவு - மீளல்; திரும்பல். மறிவரிய விந் நன்றி-பிரதி செய்யலாற்றாத இவ்வித நன்றி. சந்திரன் மதியோன் எனப் பெயரிருந்தும் அஃதின்றித் தேய்கின்றான். எமது நாயகர் அப்பெயர் குறியாமலே சிறக்கின்றார் என்க. கவி - ஆசு, மதுரம், சித்திரம், வித்தா

ரம் என்னும் நான்குவகையது. கமகம் - அரும்பொருளைச் செம்பொருளுடையாக் காட்டிப்பாடுதல். வாதி - காரணமும் மேற்கோளுமெடுத்து அளவை வாயிலாற் பிறன்கோள் மறுத்துத் தன் மதம் நிறுத்திப் பாடுவோன். வாக்கு - அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற்பொருட் பயன்களைக்கேட்ப வேட்கைவிரித்துப் பாடும் வன்மையுடையது. இவற்றினையெல்லாம் ஒருங்குடையார் சேவையர் காவலரென்பதுபற்றி அறிவர் கழகம் பரவுவ தாயிற்று.

அ. நாவலோ எனும் முழக்கம் - உரப்பன் முழக்கம்; இது களத்து நெற்போரடிப்போர் பகட்டினை யுரப்பு மொலியென்ப. மென்பால் - மருதநிலம். உபகரித்தல் - தன் கிரணங்களால் பைங் கூழ் வளர்த்தல். பேணுதல் - பாராட்டுதல். திருநாவலூரர்-நம்பியாரூரராகிய சுந்தரமூர்த்தி, இவர் கூன றத் திருவாய்மலர்ந்தது -இறைவன் பரவைப்பிராட்டியாரது ஊடல் தீர்த்த ஞான்று அவர் திருமாளிகையில் சின்னாள் தமக்குத் திருமாலையும் இனிய அடைக்காயும் கொடுத்துவந்த கூனர் ஒருவர் குருடர் ஒருவர் என இருவரையும் நம்பியாரூரர் கூனுங் குருடும் தீர்த்து ஏவல்கொண்டார் என்பது வரலாறு. இதனை 'தேனுங் குழலும் பிழைத்ததிரு மொழியாள் புலவி தீர்க்கமதி, தானும் பணியும் பகைதீர்க்கும் சடையார் தூது தருந் திருநாட், கூனுங் குருடுந் தீர்த்தேவல் கொள்வார் குலவு மலர்ப் பாதம், யானும் பரவித் தீர்க்கின்றேன் ஏழுபிறப்பின் முடங்குகூன்' எனவருந் திருத்தொண்டர் புராணத் திருவிருத்தத்தானும், 'கூற்றுக் கெவனோ பகதிரு வாரூரன் பொன்முடிமே, லேற்றுத் தொடையலு மின்னடைக் காயு மிடுதருமக்,கோற்றொழுத்து கூனனுங் கூன்போய்க் குருடனுங் கண்பெற்றமை, சாற்றித் திரியும் பழமொழி யாமித் தரணியிலே' எனவருந் திருத்தொண்டர் திருவந்தாதித் திருப்பாட்டானுங் காண்க. சீகாழியார் - ஆளுடைய பிள்ளையாராகிய ஞானசம்பந்தர். இவர் கூன றத்திருவாய்மலர்ந்தது மதுரையில் சமணரோடு வாதமேற்றஞான்று புனல்வாதத்தில் வைகையில் விடு இடும்படி பாடிய திருப்பாசுரத்து'வாழ்கவந்தணர்' என்னுந் திரு

மறையில் 'வேந்தனு மோங்குக' என எழுந்த நிறைமொழியாற் பாண்டியர் பெருமான் கூனொழிந்தனர் என்பது. இதனை 'எம்பிரான் சிவனே யெல்லாப்பொருளுமென் றெழுது மேட்டிற், றம்பிரானருளால் வேந்தன் றன்னைமுன் னோங்கப் பாட, வம்புய மலரான் மார்ப னனபாய னென்னுஞ் சீர்த்திச், செம்பியன் செங்கோ லென்னத் தென்னன் கூனிமிர்ந்த தன்றே' எனவரும் திருத்தொண்டர் புராணத் திருவாக்கானும், 'மும்மைத் தமிழ்ச் செழியன் வெப்பொடு கொடுங்கூனு மோசித்த வித்தலத்தின்' எனவரும் குமரகுருபர சுவாமிகள் திருவாக்கானுங் கண்டு கொள்க. ஒப்ப - சமமாக. செயிர் - குற்றம். நின்கூன் - நினதுவளைவு. செய்யுளினும் கூன் வைத்திலன் என்க. கூன் - ஈண்டு வெண்பா முதலிய செய்யுட்களின் முதலடியின் ஒரோவிடத்துப் பொருள்படத் தனித்து நிற்கும் கூன். கூன்போன்று நிற்றலிற் கூன் எனப்பட்டதென்க; தனிச்சொல் என்பாருமுளர். இதனை 'பொருளோடு அடிமுதல் நிற்பது கூன்' எனவரும் யாப்பருங்கலக் காரிகையிற் காண்க. உதாரணம்:—உதுக்காண், சுரந்தானு வண்மைச் சுவணமாப் பூதன், பரந்தானுப் பல்புகழ் பாடி-யிரந்தார்மாட், டின்மை யகல்வது போல விருணீங்க, மின்னு மளிதேர் மழை' எனவரும் வெண்பாவில் 'உதுக்காண்' என்பது பொருள்தழுவி அடியின் முதலிலே தனி நிற்றலாற் கூனாயிற்று. இக்கூன் சேக்கிழார் பெருமான் திருப்புராணத்தியாண்டுங்காணப்படுவதில்லையாதல் சிறப்பென்க. நாவலொடு பெயர்பெறும் பொலம்-சாம்பூநதம் என்னும் பொன்; சம்பு-நாவல்; பொலன்-பொன். பொன்னுவின் மரங்கள் உளவாதலினுனே நந்தீவு சம்புத்தீவு எனப்பெயர் வழங்குவதாயிற்று என்ப. மதி-விளி வேற்றுமை. உறுதி-கழிபெரு நன்மை. மதிய,உன்னை எங்களையன்பேணுதிலன், வரின் உன் கூனொழித்துப் பேரருள்செய்வான், ஆதலின் வருக எனத் தாமோபாயத்திற் கூறியதாகும் இச்செய்யு ளென்க.

கூ. தழைத்திரள் - மயிற்பீலிக்கற்றை. உழலும் - உழலுதற் பிரயோகத்தை 'வேத வேள்வியை நிந்தனை செய்துழல்' என

ஆளுடைய பிள்ளையார் வாக்கினும் வருதல்காண்க. சமுக்கர்-சமணர், பொய்யர் அல்லது குற்றமுடையோர். இது-களங்கம் நீக்கிப் புனித மாக்குதல். கலை - நூற்கலை, சாத்திரம். கருணையே - கருணையன்றி வேறொன்றுமில்லை; முழுக்கருணை யென்றபடி.

ம. கறுக்கச்சிவத்தல் - கோபித்தல், சினத்தல். நாண் - வெட்கம். திறத்தின் - தன்மையால் நாணத்திற்குக் காரணம் களங்கம் என்றபடி. புராதனனும் - உம்மை உயர்வு சிறப்பு. வீதல் - கெட்டொழிதல், சாதல். மேயினேன் மேயினென் - அடுக்கு, விரைவுப் பொருட்டு; இறந்தகாலமும் அதுபற்றியே யாமென்க. 'மலர்மிசை ஏகினான்' என்பதுபோல. மிக்காதல்உற - மிக்கு ஆதல் உற, மேன்மையடைதல்பற்றி. விழைதரல் - விரும்பல். விழைதரும் நகராளி என்று கூட்டியுரைக்க. இச்செய்யுள் தண்டோபாயம் பற்றிக்கூறிய தென்றோர்க.

சிற்றிற்பருவம்.—இது மூன்றும் ஆண்டிற்குரியது. சிற்றில்-சிறுவீடு.

க. வாரும் - நீண்ட; இதனை முற்றாக்கி 'வருவீர்' எனக்கோடலுமாம். திறத்தே - செயலில். ஆரும் - யாரும். யாருமிருக்கை எழாதிருந்தோம். இதுபெண்கள் கூற்று. தருக்கியிருந்திலம் - இறுமாந்திருந்தோமில்லை. அண்ணல் - விளிவேற்றுமை. அழகோ-ஓகாரம் எதிர்மறைப்பொருட்டு. சேரும் - உம்பர் நாடடையும். தண்டகநாடு - தண்டகன்நாடு; தண்டகன் இக்ஷ்வாகு புத்ரன். இவன் தனது மாறுபட்ட ஒழுக்கம்பற்றிப் பிதாவாற் றுரத்தப்பட்டு விந்தமலையின் தெற்கே வந்து நாடுகண்டு ஆளுகையில் சுக்கிரனாற் சபிக்கப்பட்டொழிந்தான். நகரழிந்து காடாகி தண்டகவனமாயிற்றென்பர். இது பிறகு தொண்டைநாடாயிற்று. இதன் வரலாறு நாகலோகமடைந்து நாககன்னிகையை மணந்த சோழன் ஒருவன் அவள் வயிற்றிற் பிறந்து தொண்டைக்கொடியைச் சுற்றிவந்த தன் புதல்வ

னுக்குத் தொண்டைமான் என நாமஞ்சூட்டி இந்நாட்டைக் கட்டியா ளச் செய்தான் என்பது. முதலில் இது சோழநாட்டின் உபநாடா யிருந்து பின்னர்த் தனிநாடாயது.

உ. அருகந்தன் - சமணர் இறைவன். பாழி - வாழ்விடம், கோயில். அவ்வுறுவர் - அவ்வமண சமயத்து முனிவர்கள். பள்ளி - சமண்பள்ளி. பழிக்கும்படி- பழிப்புறுமாறு. பாங்கு-அழகு. சிதைத் தலான் வரும் பயன் புண்ணியமோ புகழோ; இரண்டுமில்லையென் பது. செலவு-செல்கை. மதங்கொண்ட பெரிய ஆண்யானை தூக்கிய துதிக்கை மறையுமளவு செந்நெல் உயர்ந்துவளரும் வளமருவிய தொண்டை நாடென்க.

ந. வெய்ய - கொடிய. திருவில்லா - திரு எண்டு நிரதிசய ஐச்வரியம். 'திருவெண்ணீறணியாத திருவிலூரும்' என்பதிலும் இப்பொருளைக்காண்க. வினையை - தீவினையை. சிதைத்தி - அழிப் பீர். மாயை - மாயச்செயல்கள். நைய - சத்திகெடுமாறு. எங்கள் செயல் - எங்களால் செய்த சிற்றில். எங்கள் சிற்றில் சிதைப்பதை மேற்கொண்டால் மிதவீரது பெருந்தகைமைக்கு தகாத காரிய மாய் நகைப்பையுண்டாக்கு மென்றதென்க. இலாங்கலி-தென்னை. மகவான் அவை-இந்திரசபை; இது சுதன்மை என்னும் பெயர்த்து. கரும்பு வாழை கமுகு முதலியன வானுற உயர்ந்து விளங்கு கின்றன வென்பது கருதியது.

ச. பைங்கூழ் விளையப் பொருந்தும் நிலத்தை ஏருழுதலே விதியாதலன்றி புகழையும் தரும்; எங்கள் சிற்றிலமைந்த பொருந் தாத நிலத்தைக் காலால் உழுதல் (சிதைத்தல்) விதியுமன்று புகழு மன்று. இஃதன்றி திருவடியும் புழுதியளைந்து மாசுறும். மலர் தோய்தல் - அன்பர் அருச்சிக்கும் மலரில் முழுகிக்கிடத்தல். இது - புழுதி. முருந்து - மயிலிறகினடி. பண்கேட்டு முகந்து கொடுத்தல் - இசைகேட்டுப் பரிசு கொடுத்தல். கர்சின் - இன்உவம உருபு. செருந்து - செருந்தி; இதன் பூக்கள் பொன்னிறமென்க.

'செருந்தி செம்பொன்செயுந் திருநெல்வேலியுறை செல்வர்தாமே' எனவரும் தமிழ்வேதம் காணத்தக்கது.

ரு. ஒல்லாத - தகுதியற்ற. அருமருந்து - அமுதம். செவியோ ரினும் - கேட்பினும். பேசா அருமை என்பதை அருமைபேசா வெனமாற்றி அருமைபேசி என்று உரைக்க. பேசவொண்ணு அருமை என்றுமாம். நூல்கண்டார் - நூல் இயற்றியோர். உரை கரைந் தார்- உரை இயற்றியோர். தொண்டை நன்னாடு தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர், கந்தப்பையா, விசாகப்பெருமாளையர், சரவணப் பெருமாளையர், ஆறுமுகநாவலர், வீராசாமிச் செட்டியார் முதலிய கற்றோரையும்; திருவள்ளுவர், கச்சியப்பசிவாசாரியர், குக னேரியப்பர், அருணகிரிநாதர், சேக்கிழார் முதலிய நூலாசிரியர் களையும்; பரிமேலழகர் முதலிய உரையாசிரியர்களையும்; பூசலார், வாயிலார், சிவநேசர், பூம்பாவையார் முதலிய பல சிவனடியிற் கலந் தவர்களையும் ; அப்பையதீக்கிதர் முதலிய பரசமயஞ் செற்றவர் களையும் தன்னிடத்துக் கொண்டிருந்ததெனின் இப்பாட்டிற் கூறியது மிகையன்றென்பது கண்டுகொள்க.

சு. வளவன் அநபாயன் - அநபாயனுய வளவன் என மாற்றுக. வளவன் - சோழன். சோழன் கண்மணி - கண்ணிற் கருமணி போன்று இன்றியமையாதவர். 'கண்ணிற் கருமணியே மணியாடு பாவாய்' எனவரும் தமிழ்வேதமும் காண்க. சூளாமணி- சூடாமணி, முடிக்கணி. உத்தமச்சோழப்பல்லவன்-சேக்கிழார் பெருமானுக்கு அநபாயர் வழங்கிய பட்டாபிதானம். படிகொள்-நிலத்தினமைந்த. விண்மணி - விண்ணின் ஒளிரும் ஞாயிறு. சிந்தாமணி - நினைத்தது தரும் தெய்வமணி. இத்தகைய பலமணிகள் போன்றொளிரும்பெரி யோராய தேவரீர் சிற்றில் சிதைத்தல் பெருமையோவென்றது. வாங்கும் - வளைந்த. வண்டல் - வண்டலாட்டயரும் சிற்றில். மாரன் - மாரவேள். குடை - சந்திரன் மன்மதன் குடையென்க.

எ. ஏதம் - குற்றம். வளவன் - கரிகாற்சோழன். முனமேற்றி யது - கரிகாற்சோழன் தன்னாட்டினின்றும் ஏனைய நாடுகளினின்

றும் பசுங்குடி பன்னீராயிரத்தையும், நற்குடி நாற்பத்தெண்ணுயிரத்தையும் தொண்டைமண்டலத்துக் குடியேற்றிஞனென்பது வரலாறு. பசுங்குடியினும் நற்குடி மேம்பட்டது. இந்நற்குடி நாற்பத்தெண்ணுயிரத்துள் சேக்கிழார்குடி ஒன்றென்பதை 'நாடெங்குஞ் சோழன்முனந் தெரிந்தேற்று நற்குடிநாற் பத்தெண்ணு யிரத்து வந்த, கூடல்கிழான் புரிசைகிழான் குலவுசீர்வெண் குளப்பாக் கிழான்வரிசை குளத்துழான்முற், றேடுபுக ழாரிவருஞ் சிறந்து வாழச் சேக்கிழார் குடியிலிந்தத் தேசமுய்யப், பாடல்புரி யருண் மொழித்தேவ ருமபினந்தம் பாலரு வாயரும்வந் துதித்துவாழ்ந்தார்' எனச் சேக்கிழார் புராணத்து உமாபதிசிவம் கூறுமாற்ருல் அறிக. அமாத்தியர் - அமைச்சர்; அருகிலிருப்பவர் என்பது பொருள். 'அமைச்சராய்ச்செய்ப்ப' என்னும் திருவாக்கு ஈண்டுக் கருதத்தக்கது. போதம் - ஞானம். மூவர் - அயன் அரி அரன்; குணதத்துவத்தில் நின்று காரியம் செய்யும் மும்மூர்த்திகள். நாதமகன்ற - நாததத்துவங்கடந்த. பரமன் - துரியசிவம். நாதம் - நாததத்துவம். நவிலின் அடைவது - சொல்லின்வரும் சிவநிந்தை; இதுபற்றிவரும் கோர நரகம் கொள்க. 'மூவரென்றே யெம்பிரானொடு மெண்ணி விண்ணுண்டு மண்மேற், றேவரென்றே யிறுமாந் தென்ன பாவந்திரிதவரே' எனவருந் திருவாசகமும், 'மூவா முதலா முதல்வனையு மூவுலகிற், சாவார் பிறப்பார்க டங்களையுந் - தேவாக, ஒக்க நினைவாருக் கல்லவோ வோரேழு, மிக்க நரகம் விதித்ததுகாண்' என வரும் இரட்டையர் வாக்கும் ஈண்டுக் கருதத்தக்கன. நன்று - தெளிவுற. எங்கள் செயல் - எங்களது காரியமாகிய சிற்றில்; செயல் - ஆகுபெயர். நயவாதிருத்தல் - விரும்பாதிருத்தல். இயம்பேம் - புகலேம், நவிலேம் என்றது. அவ்வவ்வகையாருட் சேர்த்து எண்ணப்படும் பெற்றியரல்லராய் ஒப்புயர்வற்று விளங்குவோரெனவறிந்து பாராட்டுவோம் என்றவாறென்க.

அ. புலம்படி - புலம்பும் அடி; புலம்பல் - ஒலித்தல். விழைவு அடையின் - விருப்பம் இருக்க ஞாயமில்லை, இருப்பின் என்றபடி.

பற்பல - மிகப்பல. உபநிடதம் - வேதசிரம். பல உபநிடதமாவன: காலாக்கினியுருத்திரம், தைத்திரியம், யோகதத்துவம், சாபாலி, வாசுதேவம், பசுமசாபாலம், பிருகச்சாபாலம், நாரதபரிவிராசம், இராமரகசியம், சாண்டில்லியம், திரிபுரதாபினி, அதர்வசிரம், ஈசாவாசியம், பிருகதாரண்யம், என்பனவும் பிறவுமாம். கேட்டும் - கேட்டறிந்தும். நீறு-விபூதி. மன்னம் - எண்ணம். மண் -வயிணவ சமயிகள் அணியும் திருமண். முருங்க - அழிய. துணைதல்கூடின் - துணையப்பெறின். மோகம் - மயக்கஅறிவு. நீத்து - ஒழித்து. உய்வார் - பிழைப்பார். ஏகாரம்-தேற்றம். 'உண்மாசு கழுவுவது நீறென்றே யுபநிடத முறைப்பக் கேட்டும்; மண்மாசு படப்பூசும் வடிவுடையா ரகன்றதற்பின் மனையில்லைகும், பெண்மாசு கழியவொரு சிவனடியார் தமைக்காணப் பெறாம லின்றென், கண்மாசு படுவதெனக் கனிந்தொழுகு தலையன்பாற் கவலைகூர்வாள்' எனவரும் பரஞ்சோதியார் வாக்கு ஈண்டுகருதத்தக்கது. கன்னங்கரிய - மிகக் கரிய; சின்னஞ்சிறிய என்பதுபோன்றவழக்கு. ஒட்டெடுக்க, மோத, உதிரும் என்று கூட்டி வினை முடிக்க. பலவுதிரும் தென்னம் பழம் - தென்னம்பழம் பலவுதிரும் எனமாற்றுக.

க. மாறுபடும் - பகைமையாய. மறையோர் - வேதமோதுவோர், பிராமணர். முற்கூறுபடும்-முதன்மை வாய்ந்தவராகக் கூறப்படும். குறிப்பு - திருவுள்ளக்குறிப்பு. நிமிர் - ஓங்கியுயர்ந்த. யாம் வகுத்த - அடியேங்கள் கட்டிய. வீடு - சிற்றில். வரல்என் வருவது என்னை? நாட்டமில்லையே என்றபடி. கரம்பு - பாழ்நிலம். உம்மை இழிவுசிறப்பு. குழைசேறு - குழைந்தசேறு; வினைத் தொகை.

ய. தொழில் ஓரைந்த - படைத்தலாதி ஐந்தொழில்கள், அவற்றுள் நடுவண் அமைந்ததொழில் -அழித்தல் நடுவண் அமைந்த தொழிலென்று மேற்கொண்டீர்போலும். எனினும் நடுவணமைந்த தொழிலாகாது என்று அறிவீராகவென்றபடி. நடு-ஈண்டு நீதியாய வென்பது. அநுக்கிரக சடையாயுள்ள தொழிலென்று கைவிட்

